ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:.

ஸ்ரீமதே வேதாந்த ராமாநுஜ மஹா தேசிகாய நம:.

காஞ்சி அண்ணங்கராசாரியர் எழுதிய நமஸ்கார தத்துவத்தின்மீது திருவஹீந்திரபுரம் சேட்லூர் ஸ்வாமி எழுதியச்சிட்ட ப்ரணம நிஷ்கர்ஷக்ரந்தத்தின் பேதைமை விளக்கம்.

# ஸ்ரீ தேசிகஸூக்தி ஸம்ரக்ஷணம்.

திருப்பாப்புலியூர்

பண்டித தி. ஸ்ரீநிவாஸராமாநுஜன் எழுதியது.

சேட்லூர்ஸ்வாமி ராயம்பேட்டை பாணஸ்வாமி முதலான பல வித்வான்களின் கல்வித்திறமைகளையும் பிரதிபக்ஷி நிரஸந சூரத்தன்மைகளையும் விசதமாக நிரூபித்துக்காட்டுவது.

ஸ்ரீரங்கம் தேசிகஸூக்திஸம்ரக்ஷண ஸபையாருக்கு எச்சரிக்கை கூறுவது.

சென்னை ந்யூமான் பிரஸ்ஸில்
பதிப்பிககப் பட்டது.

1934 பவ௵

ரட்டாசிப் பூரட்டாதி.

ஸ்ரீ:

தூப்புல் பிள்ளை பொன்னடிகள் போற்றி.

ஸ்ரீரங்கம் ஸ்ரீ தேசிகஸூக்தி ஸம்ரக்ஷண ஸபையாருக்கு

# முக்கிய எச்சரிக்கை.

ஷை ஸபையின் தலைவர்கள், இந்தப் புஸ்தகத்தில் ஸப்ரமாணமாக நிரூபிக்கப்பட்டுள்ள சாஸ்த்ரீய ஸகல விஷயங்களுக்கும் பண்டித போக்யமான ஸமாதானங்களை வெளியிடாமல் வேறு எது வெளியிட்டாலும் சிறிதும் பயன்படாது.



ஸபையீர்காள்! இவ்விருள்தருமாஞாலத்திற்கு சாச்வத ஸூர்யனான ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகனுடைய திவ்ய ஸ்ரீ ஸூக்திகளை ஸம்ரக்ஷிப்பதில் உங்களுக்கு எவ்வளவு அபிநிவேசமோ, அதைவிட நூறு மடங்கான ஆவல் அடியேன் போன்ற பலபேர்களுக்கு உண்டு. நீங்கள் ஒரு ஸபையை ஸ்தாபித்துப் பரிச்ரமப் பட்டுவருவது பயன்பட வேண்டுமானால் சச்சோடிகளான போலிப் பண்டிதர்களை விட்டு, ப்ராமாணிகர்களான உண்மைப் பண்டிதர்களை நாடி அவர்கள் முகமாக க்ரந்தங்களை வெளியிடுவிக்கவேண்டும். இப்போது நீங்கள் வெளியிட்டிருக்கிற ப்ரஹ்ம நிஷ்கர்ஷமென்கிற சிறு சுவடியினால் யாருக்கு என்ன உபயோகம்? உங்கள் ஸபையில் அக்ராஸநாதிபதியாக எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீமான் உ. வே. அட்வொகேட் (திருச்சி) எ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமி ஸ்ரீ வைஷ்ணவ மண்டலத்திற்குள் நிகரற்ற மஹா வித்வான். "அஹம் வேத்மி மஹாத்மாநம்" என்றாப்போலே இவருடைய கல்விப் பெருமையை உள்ளபடி உணர்ந்தவர்கள் சிலரே. எல்லாவற்றிலும் ஆழ்ந்த ஞானத்தை ஆச்சரியமாக அடைந்து மஹாப்ராமாணிக சிகாமணியாகவும் ரஸிக ஸார்வபௌமராகவும் விளங்குகின்ற ஷை கோபாலாசாரியர்ஸ்வாமி இப்போது அடியேன் இந்த க்ரந்தமுகேந நிரூபிக்கும் விஷயங்களைப் பரம க்ருபையுடன் பூர்த்தியாகக் கடாக்ஷித்தருளட்டும். ப்ரஹ்ம நிஷ்கர்ஷ க்ரந்தகாரருடையவும் அதன் முகவுரைகாரருடையவும் யோக்யதைகளைப்பற்றி அடியேன் விரிவுக்கு அஞ்சாமல் விஸ்தாரமாகவே நிரூபித்துக் காட்டியுள்ள விஷயங்களில் துளி பிசகு இருந்தாலும் ஷை கோபாலாசாரியார்ஸ்வாமியே தடஸ்தராக இருந்து விமர்சித்துத் தமது கையொப்பமிட்டு ஒரு சிறுநூலாவது வெளியிடட்டும். அடியேனுடைய நிரூபணம் உபயோகமற்றதென்று அவர் ஸ்தாலீபுலாக ந்யாயப்படிக்காவது விளக்கிக் காட்டிவிட்டால் உங்களுடைய ஸபைக்கு மூலதனமாக 4000 நாலாயிரம் ரூபாய் ஸமர்ப்பிக்கின்றேன். அல்லது எந்த மஹாநுபாவர்க்காக நீங்கள் இந்த ஸபையை ஸ்தா




ஸ்ரீ:

ஸ்ரீமதே ஹயக்ரீவாய நம:.

ஸ்ரீமதே நிகமாந்தமஹா தேசிகாய நம:.

வாழியணி தூப்புல் வருநிகமாந் தாசிரியன்
வாழியவன் பாதாரவிந்தமலர்—வாழியவன்
கோதிலா வாய்மொழியைக் கொண்டாடிக் கொண்டிருக்கும்
தீதிலா நல்லோர் திரள்.

# ஸ்ரீ தேசிகஸூக்தி ஸம்ரக்ஷணம்.

பரம பவித்திரமான வடகலை ஸம்பிரதாயத்தில் ஜீநித்தவர்களாயும் ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனுடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் உண்மையான பரிவு உள்ளவர்களாயு மிருக்கின்ற மஹா பாக்யசாலிகளின் ஸந்நிதியில் நீசனேன் செய்யும் விண்ணப்பம்.

இந்த பூமண்டலத்தில் இதுவரையில் அனேகம் மதங்களில் அனேகம் ஆசார்யர்களும் மஹான்களும் அவதரித்திருந்தாலும் எந்த விதத்திலும் நம் தேசிகருக்கு நிகரான ஆசாரியரோ மஹானோ இதுவரையில் ஜனித்ததுமில்லை, இனி ஜனிக்கப் போகிறதுமில்லை யென்பது யாரும் ஆக்ஷேபிக்க முடியாத விஷயம். சாஸ்த்ரங்களிலோ காவ்ய நாடகாதிகளிலோ ஸம்ப்ரதாயத்திலோ, ஸம்ஸ்கிருதம் பிராகிருதம் தமிழ் என்கிற பாஷைகளிலோ மற்றும் எந்த வழியிலானாலும் அபாரமான கிரந்தங்களை அருளிச்செய்து "யச: காயேந ஜீவதி" என்கிற பழமொழிப்படியே சாச்வதமாக விளங்கி வருகின்ற ஆசார்ய சிகாமணி நம் தேசிகர் தவிர வேறு யார்? இது நாம் அபிமானத்தினால் சொல்வதோ? ஸகல மதஸ்தர்களுடையவும் உள்ளம் அறிந்த விஷயமல்லவா இது.

இப்பேர்ப்பட்ட தேசிகருடைய தரிசனத்தில் எத்தனையோ தவப்பயனாக ஜநிக்கப் பெற்றிருக்கின்ற நாம் முக்கியமாகச் செய்ய வேண்டிய கடமை என்ன வென்றால், அவருடைய ஸ்ரீஸூக்திகளை

அநவரதம் அநுஸந்திப்பதும் வாசோவிதேயமாக ஆக்கிக் கொள்வதும் பிறர்களுக்குக் கற்பிப்பதும் அச்சியற்றி ஸர்வ ஸுலபமாக்குவதும் மஹான்களைக் கொண்டு வியாக்கியானங்களைச் செய்வித்து வெளியிடுவதும் அந்த க்ரந்தங்களிலுள்ள அருமையான பொருள்களை இதர பாஷைக்காரர்களும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி பல பாஷைகளிலும் மொழி பெயர்ப்பித்து வெளியிடுவதும் ஆகிய இக் காரியங்களே யாம்.



தேசிகருடைய ஸ்ரீஸூக்திகளின் மேல் யாராவது கண்டனங்கள் எழுதியிருந்தால் அதுகளுக்கு பதில் எழுதி வெளியிடுவது முதன்மையான கைங்கரியம் என்று சில மஹான்களும் அபிப்ராயப் படுகிறார்கள். ஆராய்ந்து நோக்கினால் இது அவசியமல்லாத வீண் பிரயாஸம் என்றே சொல்லலாம். ஸூர்யனுடைய தேஜஸ்ஸில் இருள் இருப்பதாகச் சிலர் சொன்னால், அல்லது எழுதினால், அதைக் கண்டிக்க வேணுமென்று ஒரு விவேகியும் முயற்சி செய்ய மாட்டானல்லவா? அதுபோலவே தேசிகக்ரந்தங்களின்மீது கண்டனமென்று சிலர் எழுதுவதை ஒரு விஷயமாக ஆக்கிக் கொண்டு அதன்மீது கண்டனமெழுதுகிறதென்பது தேசிகருடைய பெருமைக்கு மிகவும் குறைவு என்றே மஹாமேதாவிகள் நிச்சயிக்கிறார்கள். ஸூரியன் மேலே ஒருவன் உச்சிஷ்டம் உமிழ்ந்தால் யாருக்கு நஷ்டம் என்பதை ஆலோசிக்கக் கூடியவர்கள் தெளிவு பெறுவார்கள்.

ஆனாலும், இந்த லோகமானது பாமர பூயிஷ்டமாகவேயிருப்பதால், தேசிகக்ரந்த கண்டனமென்று அவரவர்கள் எழுதி வைத்திருக்கிற க்ரந்தங்களே உலகில் பரவிவிட்டால், தேசிக தர்சன வித்வான்களும் வரவர லோபித்துவிட்டால் உண்மை மறைந்துபோய் தேசிகக்கிரந்தங்கள் துஷ்டங்களென்றும் உபயோக மற்றவைகளென்றும் மந்தமதிகள் நினைத்துவிடவும், உண்மையான தேசிக பக்தர்களுக்குங்கூட காலக் கொடுமையால் பக்தி குறைந்து போகவும் க்ரமேண நேர்ந்துவிடக்கூடுமாதலால் அப்பேர்ப்பட்ட அவத்யங்கள் நேரிடாமைக்காக நாம் தகுந்த பந்தோபஸ்து செய்து வைத்துக் கொள்ளுதல் அவசியமே என்று சில உத்தமாச்ரமிகளுங்கூட

அபிப்ராயப்படுவதால் காலகதியை அநுஸரித்து இதுவும் அவசிய மான கைங்கரியமே (அதாவது) தேசிகக்ரந்த கண்டனமாக வெளி வந்திருக்கிற கிரந்தங்களுக்குக் கண்டன மெழுதி வெளியிடுவதும் அவசியமே—என்பதை அடியேனும் ஒப்புக்கொள்ளுகிறேன். மேல் படி கைங்கரியத்தை நிறைவேற்றிவருவதற்காக ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ தேசிகஸூக்தி ஸம்ரக்ஷண ஸபை என்று ஒரு ஸபை ஏற்பட்டு அதில் பல மஹான்கள் அங்கத்தினராக இருந்து ஏராளமான த்ரவ்யங்களை சேகரித்துவருகிற விஷயம் ஸ்ரீ தேசிக பக்தர்களான ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் ஒரு விதத்தில் பரம ஸந்தோஷமே.

ஆனால் அவர்கள் தங்களுடைய பரிச்ரமங்களை ஸபலமாகவும் உலகம் புகழும்படியாகவும் ஆக்கிக்கொள்ளக்கூடிய வழியில் செல் லாமல், அல்ப ஸாரமுமில்லாத அஸாரக்ரந்தங்களை வெளியிட்டுக் கொண்டு, இந்த துர்ப்பிக்ஷ காலத்தில் லக்ஷமும் கோடியுமாக நினைக்கக்கூடிய திரவியங்களை மிகவும் வீணைப் பாழ்படுத்திக் கொண்டு உண்மையான தேசிக பக்தர்களுக்கு அருவருப்பை விளைத்துக் கொண்டு இருப்பதைப் பற்றி வருத்தப்படாமலிருக்க முடியவில்லை. ஒரு புஸ்தகத்தின்மேல் ஒருவர் கண்டன மெழுதுவ தென்றால் இது விளையாட்டான காரியமன்று. எழுதுகிறவர்கள் அனேக சாஸ்திர ஸம்பிரதாயாதிக்ரந்தங்களில் ஆழ அவகாஹித்த வர்களாயும் தலைப்பாகைக்குத் தக்கபடி தலையைச் சீவுகிறவர்களாய் இராமலும் பிராமாணிக மார்க்கத்தில் பிடிவாத முடையவர்களாக வும் எதிரிகளால் இலேசாக அசைக்கக் கூடாதவர்களாகவும் தூஷண பரிஹாஸாதிகளை வெகு தூரத்தில் தள்ளிவிட்டு விஷயங்க ளுக்கு மாத்திரம் விடை யளிப்பவர்களாயும் கூடியமட்டில் ப்ரம ப்ரமாதங்கள் இல்லாதவர்களாயும், விஷய விசாரம் வருங்கால் எதிரி கள் எடுத்துக்காட்டும் ஒவ்வொரு விஷயங்களுக்கும் சளைக்காமல் பிராமாணிகமான ஸமாதானங்களை வெளியிட்டுவிட்டே வேறு காரி யத்தில் கைவைப்பவர்களாயும் இருக்க வேண்டும்.

இப்படிப்பட்ட குணங்கள் பொருந்திய தேசிக ஸம்பிரதாய வித்வான்கள் ஆங்காங்கு இல்லாமல் போகவில்லை. விசேஷமாக இல்லாவிட்டாலும் ஏதோ சில பேர்களாவது இருக்கவே யிருக்கி

ரூர்கள். ஆனால் அப்படிப்பட்டவர்களைப் பொருள்படுத்துகிறவர்களும் உத்ஸாஹப்படுத்துகிறவர்களும் ஆதரிக்கிறவர்களும் அடியோடு இல்லாமையால் அந்த மஹான்கள் உலகுக்கு உபகரிக்க உரிமையில்லாமலே போகிறது. ஆனாலும் காலம் இப்படியே போய் விடாது. அந்த மஹநீயர்கள் மூலமாக ஸ்ரீ தேசிக திவ்யஸூக்தி மண்டன க்ரந்தங்களை உலகில் பரவவிட்டு பக்தர்களை வாழ்விக்கவும் குதர்க்கிகளின் செருக்கை அடக்கவும் நேர்த்தியான ஸமயம் அணுகி யிருக்கின்றது. சென்னைமா நகரத்தில் ஸமீப காலத்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள தேசிக திவ்யஸூக்தி கல்மஷ நிவாரணீ ஸபையின் சார்பாக அப்படிப்பட்ட க்ரந்தங்கள் இனி அடிக்கடி வெளிவரும்படியாக மஹான்களின் முயற்சிகள் நடந்துவருகின்றன.

ஆயினும் ஏற்கனவே ஸ்ரீரங்கத்தில் ஸ்தாபனம் பெற்றிருக்கின்ற ஸபையும் ஒழுங்குபட்டுச் சீர்மை பெற்று, உத்தேசித்த காரியங்களை கம்பீரமாக நடத்திவர நேர்ந்தால் இது சர்க்கரைப்பந்தலில் தேன்மழை பொழிந்தவாருகும். அந்த ஸபையில் நடந்த பல ஸம்மேளனங்களுக்கு அடியேனும் போய் அந்வயிக்க நேர்ந்த காலங்களில் அடியேனுடைய குறைகளை ஷெ ஸபையின் அங்கத்தினரிடம் விசதமாக நிரூபித்துத் தெரிவித்தும் அவர்கள் திருப்திகரமான பதில் அளிக்காமலே காரியங்களை மிகவும் ஊழலாக நடத்திவருகிறபடியால் இந்தக் குறைகளையும் வருத்தத்தையும் அடியேன் நெஞ்சில் அடக்கிவைத்துக் கொள்ள முடியாமல் உலகமறியக் கதறுகின்றேன். நமக்குள்ளே கந்தல் பொந்தல்களும் சொத்தல் புழுத்தல்களும் பல கிடந்தாலும் அதுகளை நாமே வெளிக்காட்டிக் கொள்வது அஸங்கதம் என்பது தெரிந்தும், அதனாலேயே இதுவரையில் ஒருவாறு உள்ளடங்கியுமிருந்த அடியேன் இப்போது தாங்க முடியாமல் வெளிவந்து சில உண்மை விஷயங்களை உபபாதிக்கிறேன். பிராமாணிகர்கள் கவனிக்க வேண்டும். ஸரியான பதிலும் தெரிவிக்க வேண்டும். தேசிகதரிசனத்தை ருஜுவானவழியில் காக்கவேண்டும்.

சென்ற புரட்டாசித் திருவோணத்தில் ஷெ ஸ்ரீரங்கம் ஸபையாரால் ப்ரஹ்ம நிஷ்கர்ஷம் என்றொரு சிறுபுத்தகம் வெளியிடப்

பட்டது. இதனை இயற்றியவர் ஸ்ரீமான் உ. வே. திருவகீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் ஸ்வாமி. இதற்கு முகவுரை யெழுதியவர், திருக்குடந்தை ராயம் பெட்டை உ. வே. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமி. 1927ஆம் வருஷத்தில் காஞ்சீபுரம் ஸ்ரீமான் அண்ணங்கராசாரியார் ஸ்வாமி எழுதி வெளியிட்டிருந்த நமஸ்கார தத்வம் என்கிற க்ரந்தத்திற்கு ஷை ப்ரணம நிஷ்கர்ஷம் கண்டனமாக அவதரித்ததாம்.

அண்ணங்கராசாரியார் வெளியிட்டிருக்கும் கிரந்தங்களில் சிலவற்றுக்கோ பலவற்றுக்கோ பதில் எழுதவேணு மென்கிற ஆவல் தேசிகபக்தர்களில் பலபேர்களுக்குண்டு. அந்த ஆவல் ஒருவாறு தீரும் ஸமயம் நேர்ந்தால் இது பாராட்டத்தகுந்ததே. சிலமாதங்களுக்குமுன் அவருடைய நமஸ்காரதத்வத்திற்கு ஸ்ரீ மது பய வே. புத்தங்கோட்டம் ஸ்வாமியால் ப்ரணமப்ரகாச மென்று ஒரு பதில் புஸ்தகம் எழுதப்பட்டு அது மதுரை தேசிகபக்த சபையாரால் வெளியிடப்பட்டது. அது வெளிவந்த ஒரு வாரத்திற்குள் அண்ணங்கராசாரியரால் நமஸ்கார தத்வ விஜயத்வஜம் என்கிற பதில் புஸ்தகம் கிளப்பப்பட்டது. அதில் இன்னம் வெளிவரவேண்டிய பாகம் பாக்கியிருப்பதாகத் தெரிகிறது. ஆனாலும் வெளிவந்திருக்கிறவரையில் பார்த்தால் கண்டன க்ரந்த ப்ரணயநப்ரவ்ருத்தியே அநாவச்யக மென்று நன்கு ஸ்தாபிக்கப்படுவதாக நிஷ்பக்ஷபாதிகள் கருதுகின்றார்கள். எப்படியிருந்தாலும் அந்த விஜயத்வஜக்ரந்தம் பூர்த்தியாக வெளிவந்தபின் யாதுசெய்யத் தகுதியோ அதுசெய்வது யுக்தம். அதைவிட்டு இப்போது மிகவும் அநாவச்யகமாகவும் ப்ராமாணிக விஷய நிரூபண லவலேசமுமில்லாமலும் ஒரு புஸ்தகத்தைக் கிளப்பியிருப்பதனால் யாருக்கு என்னபயன்? ஆனால் அடியேன் இப்படியெழுதுவதைக் கண்டவுடனே, 'இது உண்மையான தேசிகபக்தன் சொல்லுகிற வார்த்தையன்று; இது ஏதோ கபடநாடகம் போலும்' என்று சிலர் நினைத்துவிடலாம். யார் எப்படி வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். தேசிக ஸம்ப்ரதாயத்திலேயே ஜநித்திருந்தும் சில பேர்கள் அண்ணங்கராசாருக்கு தாஸாநு தாஸர்களாயிருப்பதாகவும் அவருடைய புஸ்தகங்களைத் தலையில் சுமந்து கொண்டு தெருத் தெருவாகத் திரிவதாகவும் ஸ்ரீ ராயம் பெட்டை க்ருஷ்ணமாசாரி

ஸ்வாமி அடிக்கடி எழுதிக்கொண்டே வருகிறாரல்லவா ? அப்படிப் பட்ட வ்யக்திகளிலே அடியேன் ஒருவன் என்றாவது வைத்துக் கொள்ளுங்கள்: ஆத்மாவை வஞ்சித்து அடியேன் ஒரு அக்ஷரமும் எழுதகில்லேன். 'நம்மடவர்கள் வெளியிடுகிற வீண் ஆபாஸங்களையுங் கூட அப்படியே ஆமோதித்து விட்டால்தான் நல்லது' என்று ஒரு விவேகியும் எண்ணலாகாது. ஸாரத்தை ஸாரமாகவே கொள்வதும் அஸாரத்தை அஸாரமாகவே கொள்வதுந்தான் பிராமாணிக நிலைமை. இப்போது அடியேன் நிரூபிக்கிற விஷயங்களில் ஒரு அலத்ய மிருந்தாலும் தாராளமாக எடுத்துக் காட்டலாம்.

சேட்லூர் ஸ்வாமிக்கும் அண்ணங்கராசாரி ஸ்வாமிக்கும் க்ரந்த லேகநவிஷயத்தில் சுமார் பத்துவருஷ காலமாகவே வாதிப்ரதிவாதி பாவம் உண்டென்பதை தென்னிந்தியா முழுவதும் அறிந்திருக்கின்றது. சேட்லூர் ஸ்வாமிக்கு உள்ள ஸாஹித்ய வ்யுத்பத்தி இவ்வளவு!, சாஸ்த்ர வாஸநை இவ்வளவு!, ஸம்ப்ரதாயப் பயிற்சி இவ்வளவு, தேசிகஸூக்திக்கும் அவர்க்கு முள்ள ஸம்பந்தமிவ்வளவு, ஸதாசார்ய ஸேவை இவ்வளவு, பகவத் விஷய சப்த ச்ரவணம் இவ்வளவு என்று ஒவ்வொருவிஷயத்தையும் திராசில் எடை போட்டு நிறுத்துக் காட்டுமாபோலே அலகலகாக நிரூபித்துக் காட்டி அண்ணங்கராசாரியரும் அவருடைய சீடர்களும் புஸ்தகங்களை நாடெங்கும் பரவ விட்டிருக்கிறார்கள். 'அண்ணங்கராசாரியர் எழுதினது தானே' என்றுபாராமல் வ்யக்தியை மறந்து விஷயங்களை மாத்திரம் கவனித்தால், பக்ஷபாதத்தை நீக்கி நடுநிலையில் நின்று நோக்கினால் அவர் நிரூபித்திருக்கிற ஒவ்வொரு விஷயமும் என்ன அற்புதம்! என்ன ஆச்சரியம்! என்ன ஆராய்ச்சி! என்ன நுண்ணுணர்வு! என வியக்கத்தக்கதே.

ஸம்ப்ரதாய விஷயங்களிலே நாம் பிடிவாதங் கொண்டு எதை எப்படி வேணுமானாலும் சொல்லுவோம், எழுதுவோம். அதுவேறு விஷயம். உலகிலுள்ள எல்லாருக்கும் பொதுவான சாஸ்திரவிஷயங் களில் சேட்லூர் ஸ்வாமி மருண்டிருக்கிற விதங்களையும், ஷெ ஸ்வாமிக்கு எதிலும் அந்யதாஜ்ஞானந்தவிர வேறில்லை யென்பதை ஸாக்ஷியங்களுடன் நிரூபித்துக்காட்டி யிருக்கிறபடிகளையும் பார்த்தால் அவ்

விஷயங்களில் சாஸ்திரவிசாரம் நடத்தவேண்டியது அவசியமல்லவா? ஷை ஸ்வாமியின் அஜ்ஞான அந்யதாஜ்ஞானங்களை கண்ணாடிபோல் காட்டி விரிவாக நிரூபித்திருக்கிற புஸ்தகங்கள் இதுவரையில் சுமார் 10 வெளி வந்திருக்கின்றன. அதற்கெல்லாம் என்ன ஸமாதானம் வெளியிடப்பட்டது? அதற்கெல்லாம் ஒன்றும் வாய் கை திறவாம லிருந்துவிட்டு இப்போது அநாவச்யகமாகவும் அப்ரஸக்தமாகவும் ப்ரணம நிஷ்கர்ஷ மென்கிறவொரு புஸ்தகத்தைக் கிளப்பினது எதற்காக? பழைய விஷயங்களெல்லாம் மறைந்து போயிருக்கு மென்று எண்ணமா? வித்வான்களுக்கு அவை மறந்துபோயிருக்கு மென்று தேற்றவா? வாஸ்தவத்தில் ஸந்த்யாவந்தனம் முதலியவை மறந்தாலும் அண்ணங்கராசார் நிரூபித்திருக்கும் (சேட்லூர் ஸ்வாமி யின்) அபத்தங்களில் ஏகதேசமும் ஒரு வித்வானுக்கும் மறக்கமாட் டாதே. "ப்ரஹ்மதண்ட ப்ரகாசாநாம் வித்யுத்ஸத்ருச வர்ச்சஸாம், ஸ்மரந் ராகவபாணாநாம் விவ்யதே ராக்ஷஸேச்வர:" என்றுப்போலே சேட்லூர் ஸ்வாமிக்கும் அவை அஹோராத்ரமும் ஸ்மரணத்தி லேயே இருக்குமே. ஒன்று இரண்டா? சுமார் நூறு விஷயங்களில் சேட்லூர் ஸ்வாமியின் மருள்களை அவர் ப்ரமாண புரஸ்ஸரமாகப் பரக்க எடுத்துக்காட்டி யிருக்கிறாரே. ஏன் அவற்றுக்கு இந்த சேட்லூர்ஸ்வாமி பதில் எழுதவில்லை?

இதைக் கேட்டால் இவர் என்ன சொல்லுகிறாரென்றால், ஞானலவலேசமுமில்லாத அண்ணங்கராசாரியர் பொறாமையினாலும் துராக்ரஹத்தாலும் ஏதோ தப்புந்தாறுமாக எழுதி அச்சுப்போட்டு விட்டால் அதையெல்லாம் பொருள்படுத்தி அதற்கு பதில் எழுத வும் வேணுமோ? என்று மிகவும் லேசாகச் சொல்லிவிடுகிறார். இந்த ஸமாதானத்தை நாம் யுக்தமென்றே கொள்ள வேணுமானால் இந்த சேட்லூர் ஸ்வாமியும் மற்றும் எவரும் அண்ணங்கராசா ருடைய ஒரு நூலுக்கும் ஒரு பதிலும் எழுதாமலே யிருந்திட வேண்டும். அவருக்கு ஞானலேசமு மில்லை யென்பதும் அவர் மனம் போனபடி எதையும் அஸம்பத்தமாக எழுதிவைக்கிறவர் என்பதும் அதை ஒரு பதார்த்தமாகக்கூட நாம் மதிக்கவேண்டியதே யில்லை யென்பதும் இந்த சேட்லூர் ஸ்வாமி முதலானோருடைய

மெய்யான கொள்கையாயிருக்குமாகில் அவருடைய எந்த புஸ்தகத்தையும் லக்ஷியம் பண்ணாமலும் ஒரு புஸ்தகத்தையும் கண்டிக்க முயலாமலும் இருந்துவிட வேண்டும். ஒருவரும் அப்படியிருக்கவில்லை. அண்ணங்கராசாருடைய க்ரந்தங்களுக்குக் கண்டனமியற்ற வேண்டுமென்றே ஆங்காங்கு வித்வான்களைத் திரட்டி ஸபைகள் சேர்க்கிறார்கள். இதற்காகவே த்ரவ்யங்களையும் சேகரிக்கிறார்கள். அண்ணங்கராசாருடைய க்ரந்தங்களைக் கண்டித்து வருவதாகவும் விளம்பரங்கள் வெளியிடுகிறார்கள். 'அண்ணங்கராசாருடைய க்ரந்தங்களுக்குக் கண்டன க்ரந்தங்கள் இங்கே விற்கப்படும்' என்று பலகை போடுகிறார்கள். நாலைந்து காகிதங்களைச் சேர்த்து ஒரு புஸ்தகமாக்கி 'காஞ்சீ அண்ணங்கராசாரியருடைய.........க்ரந்தத்திற்குக் கண்டனம்' என்று முகப்பில் பதிப்பிக்கிறார்கள். இன்னமும் எவ்வளவோ செய்கிறார்கள். இரவும் பகலும் இடைவிடாது அண்ணங்கராசாருடைய அநுஸந்தான மயமாகவே இவர்கள் இருந்துவருகிறார்கள். நமஸ்கார விஷயத்தில் அண்ணங்கராசாருக்குக் கண்டனமாக புத்தங்கோட்டம் ஸ்வாமி எழுதி வெளியிட்டிருப்பது போராதென்று கருதி இப்போது சேட்லூர் ஸ்வாமி கிளம்பியிருக்கிறாரே; இந்த ஒரு விஷயத்தை எடுத்துக் கொண்டு பார்த்தாலும் அண்ணங்கராசாருடைய க்ரந்தங்கள் லேசானவை யல்ல—என்பது தானே விளங்கும். இப்படிப்பட்டவிவர்கள் "அநாரம்போ மநுஷ்யாணும் ப்ரதமம் புத்தி லக்ஷணம், ஆரப்தஸ்ய அந்தகமநம் த்விதீயம் புத்தி லக்ஷணம்." என்கிறபடியே தொட்ட காரியத்தைத் தலைக்கட்டிவிடுகிற வரையில் ஒரே அழுத்தமாக நிற்க வேண்டாமா? அவருக்கு ஞான லவலேசமு மில்லையென்றும் அவர் எழுதுகிற தெல்லாம் பேய் பிதற்றல்க ளென்றும் ஒருஸமயம் சொல்லுகிற விவர்கள் அவருடைய நமஸ்கார தத்வச் சுவடியில் என்னவிஷயமிருக்கிறதென்று கொண்டு கண்டிக்க ஆரம்பித்துவிட்டார்கள்! அவசியமானல் அவருடைய அஸம்பத்தப்ரலாபங்களைக் கண்டிக்க எவனாவது ஒரு அல்பஜ்ஞன் பிரவர்த்தித்தால் போதுமே; ஒரு மஹா மொஹோபாத்யாயர் கண்டன மெழுதுகிறவராம். இன்னொரு மஹாமொஹோபாத்யாயர் அதற்கு அநுபல்லவி

பாடுகிறவராம். எதுக்கு இத்தனை பெரிய பெரிய ஸம்பிரமங்களோ தெரியவில்லை. தேசிகனுடைய கிரந்தங்களிலுள்ள விஷயங்களுக்குக் கண்டனமாக அண்ணங்கராசார் ஒருவர்தானு எழுதுகிறவர்; மற்றும் பல பேர்களும் எழுதி வெளியிட்டிருக்க வில்லையா? அந்த க்ரந்தங்களைப் பொருள்படுத்தி யாராவது கண்டன மெழுத முயன்றிருக்கிறார்களோ? மூலைக்கு ஒருவராகக் கிளம்பி கண்டனம் கண்டனம் என்று எழுதுவதெல்லாம் அண்ணங்கராசா ரொருவருடைய க்ரந்தங்களை நோக்கித்தானே. இதற்காகவே யன்றோ ஒரு ஸபையும் ஸ்ரீரங்கத்தில் ஏற்படுத்தினார்கள். ஒரு வ்யக்திக்காக ஊருராகத் திரண்டு இத்தனை ஸம்பிரமங்கள் கொள்ளாநிற்க, அந்த வ்யக்தியைப் பற்றி அவஹேளையாகப் பேசிவிட்டால் பொறாமை தவிர வேறு என்ன வெளியாகும்?

இந்த இந்தியாவில் போலியான மஹாமோஹ உபாதி ஆயர்கள் பலர் இருந்தாலும் உண்மையான—யோகார்த்த பூர்த்தியுள்ள மஹா மஹோபாத்யாயர்கள் சந்திர ஸூர்யர்களைப்போலே இரண்டு மஹநீயர்கள் தென்னாடும் வடநாடும் தொழநிற்பாராய் திருப்பதியிலும் மைஸூரிலும் விளங்குகிறார்கள். ஸ்ரீ உவே. கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமியும் ஸ்ரீ உவே. லக்ஷ்மீபுரம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியுமே அந்த மஹான்களாவர். அவ்விருவரும் அண்ணங்கராசாருடைய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களுக்கு எப்படிப்பட்ட அபிநந்தன பத்ரிகைகள் கொடுத்திருக்கிறார்களென்பதை ஆர்தான் தெரிந்து கொள்ளவில்லை? உலகம் பரவ அச்சிடப்பட்டிருக்கிற தல்லவா? அப்படிப்பட்ட அபிநந்தந பத்திரிகைகளுக்கு பங்கம் விளைத்திட வேண்டுமென்று இவர்கள் பிரபலமான முயற்சிகள் செய்து தாங்களே பங்கமடைந்தது யாருக்குத் தெரியாது? இப்படிப்பட்ட நிலைமையில், அண்ணங்கராசாருக்கு ஞானமே கிடையாதென்றும் அவர் எழுதுவதெல்லாம் அஸாரமென்றும் இவர்கள் பல்லவியும் அநுபல்லவியும் பாடிக்கொண்டு வருவது வெறும் பொறாமையின் கார்யமே யென்பது உலகுக்கு வெட்ட வெளிச்சமே யாகும்.

தமிழ் சாஸ்திரங்களில் ஒப்புயர்வற்ற மஹா வித்வான்களாக நாளைக்கும் விளங்கிவருகின்ற ஸேதுபதி ஸம்ஸ்தான வித்வான். ஸ்ரீ. உவே. ரா. இராகவையங்கார் ஸ்வாமிகள், மஹாமஹோபாத்யாய.

ப்ரஹ்ம ஸ்ரீ. வே. சாமிநாதையரவர்கள், மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகாசிரியர்கள் முதலானோர் அண்ணங்கராசாருடைய தமிழ்ப் புலமையைப் பற்றி எவ்வண்ணம் பாராட்டி அபிநந்தன பத்திரிகைகளைப் பரவச் செய்திருக்கிறார்களென்பதும் தமிழுலகத்திற்கு நன்றாய்த் தெரிந்ததே. இங்ஙனம், வடகலை வித்வான்கள் தென்கலை வித்வான்கள் 'ஸ்மார்த்த வித்வான்கள் என்கிற வாசியில்லாமல் பலபல மஹா வித்வான்களாலும் மஹாமஹோபாத்யாயர்களாலும் நிஷ்பக்ஷபாதமாகப் புகழப்பட்டு விளங்குகின்ற அண்ணங்கராசாரியர்மீது நமக்கு ஏதோ வொருவழியில் விரோதமிருக்கின்றதென்றால், அதற்காக, போனபோகிற போக்கெல்லாம் இழிவுரைகளைக் கண்டபடியும் எழுதி நிரப்பி கண்டன க்ரந்தமென்று பெயரிட்டு வெளியிட்டுவிட்டால் இது எந்த விஷயத்திற்குக் கண்டனமாகுமோ தெரியவில்லை. அவருடைய யோக்யதைக்கும் கண்டனமாகாது, அவரெழுதியுள்ள விஷயங்களுக்கும் கண்டன மாகாது, அவர் படைத்திருக்கின்ற பெரும் புகழ்க்கும் கண்டனமாகாது; தங்களுடைய போலிப் பாண்டித்தியத்திற்கே கண்டனமாய் முடியுமென்பது திண்ணம் வருஷ சதமானாலும் வேறுண்டோ?

இப்போது ப்ரணம நிஷ்கர்ஷ புஸ்தகத்தை யெழுதின சேட்லூர் ஸ்வாமியும் அதற்கு முகவுரை வரைந்திருக்கின்ற ராயம்பெட்டை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியும் அனேக பிருதுகளை வஹிக்கின்றவர்களல்லவா? அரசாங்க மறிந்த பண்டிதர்களல்லவா? அவர்களுடைய ஞானம் மிகவும் சிறந்ததாகவன்றோ இருக்கும். அவர்கள் ஸாமாந்ய பண்டிதர்களாக இருக்க மாட்டார்களன்றோ? அவர்கள் எழுதுகிற விஷய மென்றால் மெச்சத்தகுந்ததாகவே யிருக்குமல்லவா?—என்று சிலர் நினைக்கலாம், சொல்லலாம். இங்கே கவனிக்க வேண்டும். ஸர்ட்டிபிகேட்டுகளைக் காட்டி பாண்டித்யத்தை ப்ரஸித்தபடுத்திக் கொள்வதென்பது ஒரு வழி; பாண்டித்யத்தின் உண்மையான லக்ஷணங்களைக் காட்டி பண்டித கோஷ்டிகளிலே அதை மெய்ப்பித்துக் கொள்வதென்பது ஒரு வழி. முதலில் குறிப்பிட்ட மாதிரியாக இவர்கள் ஸர்ட்டிபிகேட்டுகளை விசேஷமாக ஸம்பாதித்துக் கொண்டிருக்கிறார்களென்பதில் நாம் என்ன தடை சொல்லப் போகிறோம்? அப்படிப்பட்ட ஸம்பாதநத்தில் இரவு பகலாக ஊக்கங் கொண்டு இன்னமும் ஏராளமாக ஸம்பாதித்துங் கொள்ளலாம்.

இப்படி நாம் எழுதுவதைக் காண்பவர்கள் என்ன நினைக்கக்கூடு மென்றால், 'அரசாங்கத்தவர்களால் கிடைத்த டைடல்களைப் பற்றியே இப்படி சொல்லிவிட்டால், அனேக மஹாமஹோபாத்யாயர்களால் அண்ணங்கராசாருடைய யோக்யதைகளுக்கு விசேஷ அபிநந்தந பத்ரிகைகள் கிடைத்திருப்பதைப் பற்றிப் புகழ்ந்தெழுதினதற்கு ஒரு அர்த்தமு மில்லையாய் விடுகிறதே;' என்பார்கள். அவர்கள் கவனிக்க வேண்டியதாவது :—

'அவர் அந்த டைடல் ஸம்பாதித்திருக்கிறார், இவர் இந்த பிருது பெற்றிருக்கிறார், இவரை இன்னார் கொண்டாடியிருக்கிறார், அவருக்கு இன்னார் அபிநந்தன பத்ரிகை கொடுத்திருக்கிறார்' என்கிற இவ்வளவையே கொண்டு ஒருவருடைய யோக்யதையை நிஷ்கர்ஷிப்பதென்று கொண்டால், அநபிஜ்ஞர்களால் கொடுக்கப்பட்ட பிருதுகளை மாத்திரம் சுமந்து கொண்டிருக்கின்ற இவர்களைக் காட்டிலும், ஸுப்ரஸித்த ஸர்வஸம்ப்ரதிபந்ந பண்டித சிகாமணிகளின் பரிசீலந பூர்வகமான அபிநந்தனங்களைப் பெற்றிருக்கின்ற அண்ணங்கராசாருடைய பாண்டித்யமே சிறக்கும் என்று சொல்லவந்தோம். வாஸ்தவத்தில் எல்லாரும் ஆலோசித்துப் பார்க்கலாம்; மஹா மஹோபாத்யாய பிருது வஹிப்பவர் இப்போது எத்தனையோ பேர்கள் இருக்கின்றார்கள். எல்லாரும் ஒரு நிகரான பண்டிதர்களாக ஆய்விடுவார்களோ? கபிஸ்தலம் ஸ்வாமி, லக்ஷ்மீபுரம் ஸ்வாமி என்றால் மண்டலம் மண்டலமாகக் கைகூப்பும். மற்ற பேர் வழிகளை எடுத்தவாறே, "తదేవ గృహ్యతాం నామ శాకమండూకరాసభైః। తిసృణాం తావతా హన్త మూర్తీనాం కిమిహాగతమ్. ததேவ க்ருஹ்யதாம் நாம சாகமண்டூகராஸபை:, திஸ்ருணாம் தாவதா ஹந்த மூர்த்தீநாம் கிமிஹாகதம்?" என்று ஸ்வாமி தேசிகன் ஸுபாஷிதநீவியில் அருளிச்செய்தது இந்த ராயர் சேட்டர் போல்வாரைக் கருதியே போலும்! என்றுதானே சொல்ல நேரிடும். "அண்டஜா: புண்டரீகேஷு, ஸமுத்ரேஷு ஜநார்த்தந:, நீலகண்டாச்ச சைலேஷு நிவஸந்து ந தே ந தே." என்கிற தேசிக ஸுபாஷிதமும் இவர்களையே நோக்கியதாகும்.

ராவ் ஸாஹிப், ராவ் பகதூர், திவான் பஹதூர் முதலிய பட்டப் பெயர்களைப் பெறுகிறவர்களில் எத்தனை பேர்கள் கைநாட்டுப் பேர்வழிகள் என்பதை நாம் விவரிக்க வேண்டுமோ? பட்டப் பெயர்களைக்

கண்டு ப்ரமிக்குங் காலமோ இது? ஒருவனும் மயங்க மாட்டான். ராயம்பெட்டை—இப்போது எழுதியிருக்கிற முகவுரையில் சேட்லூர் ஸ்வாமியை எல்லை கடந்து புகழ்ந்திருக்கிறது. வாஸ்தவத்தில் இவருடைய எண்ணம் என்ன வென்றால், அந்த நரஸிம்ஹாசாரியருடைய ஞானச் சாயங்களை யெல்லாம் மறுபடியும் ஜீர்ணோத்தாரணஞ் செய்து [அலசி] வெளிப்படுத்திக் கூத்து பார்த்துக் களிக்க வேணுமென்று வெகு குதூகலம் கிளர்ந்துவிட்டது போலும். அதற்காகவே முகவுரை யெழுதத் தொடங்கினரிவர். இவரைக் கொண்டு முகவுரை யெழுதுவித்த அந்த நாஸிம்ஹாசர்ருடைய எண்ணம் என்ன வென்றால், அதே எண்ணந்தான். இதில் முற்பாடு யாருக்கென்பதுதான் நமக்குத் தெரியவில்லை. இது நிற்க.

பிரகிருதம் க்ரந்தகாரருடையவும் முகவுரைகாரருடையவும் யோக்யதைகளைப்பற்றிக் கூலங்கஷமாகவே பரிசீலனை செய்வோம். பண்டிதலக்ஷணங்கள் இவர்களிடத்தில் எவ்வளவு பொருந்தியிருக்கின்றதென்பதை ஆரத்தீர ஆராய்வோம். புண்யஜநமென்று மஹான்களுமிட்ட பெயரைக் கொண்டுள்ள சிலவகுப்பினர் இவ்விடத்தில் வித்வான்களின் ஸ்மரணத்திற்கு வருகிறார்களா இல்லையா பாருங்கள். க்ரந்த மெழுதுகிறவர்கள் மனச்சாக்ஷியத்தை மீறாத பிராமாணிகர்களாக இருக்கவேண்டுமென்பது முக்கியமான விஷயம். ஞானம் மட்டமாயிருந்தாலும் இந்தக் குணம் கட்டாயமானது. இது இவர்களிடத்தில் முழுமோசமென்பதைக் கல்வெட்டாகவே காட்டுவோம். அண்ணங்கராசார் நமஸ்காரதத்வத்தில் "உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்கிற ஸ்ரீவைகுண்டகத்ய ஸ்ரீஸூக்தியை யெடுத்துக் கொண்டு விசாரம் செய்துவருகையில், அவ்விடத்திலேயே மஹாவாக்ய ஸமாப்தியில் "யாசமாந: ப்ரணம்ய ஆத்மாநம் பகவதே நிவேதயேத்" என்கிற வாக்கிய மிருப்பதை யெடுத்துக் காட்டி ஏதோ ஸ்வஸம்ப்ரதாயாநுகூலமாக எழுதியிருக்கிறார். அந்த வாக்யத்தில் ப்ரணம்ய என்றுள்ளதை அவர் தமக்கு வெகு ஸாதகமாகக்காட்டியிருக்கிறார். [அதை நமஸ்கார தத்வம் பக்கம் 12ல் காணலாம்.] அதை தேசிகபக்தர்கள் கண்டிப்பதற்கு வெகு அழகான வழிகள் பலவுண்டு. இவ்விடத்தில் அண்ணங்கராசார் செய்திருக்கிற துர்வாதத்தை ப்ராமாணிகமான வழியில் கண்டிப்பதை விட்டு மிகவும் அருவருக்கத்தக்கவழியை

சேட்லூர்ஸ்வாமி கைப்பற்றி யிருக்கிறார். அதாவது, அண்ணங்க ராசார் எந்த ப்ரணம்ய பதத்தைத் தமக்கு ஸாதகமாகக் காட்டி ஞரோ அந்த பதம் அவ்விடத்தில் ப்ரக்ஷிப்தமாகிக் க்ல்பிதமேதவிர பாஷ்யகாரர் ஸாதித்த தல்ல என்று (பக்கம் 9ல்) சேட்லூர் ஸ்வாமி எழுதியிருக்கிறார். வாஸ்தவத்தில் அந்த ப்ரணம்யபதம் அங்கிருந் தால் அது தென்னாசார்யர்களுக்கு ஸாதகந்தான், வட வாசார்யர் களுக்கு பாதகந்தான் என்று இவர் தீர்மானித்து விட்டதாகத் தேறுகிறது. இந்த சேட்லூர் ஸ்வாமியே 18 வருஷங்களுக்கு முன்பு (1917 ஆம் வருஷத்தில்) கத்யத்ரயத்தை தேசிகபாஷ்ய மொழிபெயர்ப்புடன் அச்சிட்டிருக்கிறார். அதில் (பக்கம் 280 ல்) விவாதாஸ்பதஸ்தலத்தில் ப்ரணம்ய பதத்தை நன்றாக அச் சிட்டிருக்கிறார். "ப்ரணம்ய—ஸேவித்து" என்று உரையும் எழுதி யிருக்கிறார். இப்படிப்பட்ட விவர் இப்போது அந்தபதத்தைக் கல்பிதமென்கிறார். "பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் ப்ரணம்ய என்கிற பதத்திற்கு அர்த்தம் சொல்லப்படவில்லை யாகை யினால் அது புதிதாகச் சேர்க்கப்பட்டதென்று ஏற்படுகிறது" என்று கைகூசாமல் எழுதிவிட்டார். பெரியவாச்சான் பிள்ளையும் தேசிகனும் ப்ரதிபதார்த்தம் எழுதப்புகுந்தவர்களல்லர். அனேகபதங்களையும் அனேக வாக்கியங்களையும் தொடாமலே விட்டிருக்கிறார்கள். அதே இடத்தில் "ததோ பகவதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநேந அமர்யாத சீலவதா அதிப்ரேமாந்விதேந அவலோகநேந அவலோக்ய" என்கிற விடத்திற்கு "ஆத்மஸமுஜ்ஜீவந ஹேதுவான பார்வையாலே கடா க்ஷித்து" என்றிவ்வளவே பெரியவாச்சான் பிள்ளை அர்த்த முரைத் திருக்கிறார். இதனால் அங்கு மற்ற பதங்கள் கல்பிதம் என்று சொல்லிவிடுவதோ? அங்கு தேசிகன் அடியோடு ஒன்றுக்குமே அர்த்த மெழுதவில்லை; "உத்தா யோத்தாய புந: புந: ப்ரணம்ய" என் கிற வாக்யத்தையும் அடியோடு தொடவில்லை. ஆதலால் அந்த வாக்யங்களெல்லாமுமே கல்பித மென்று இவர் எழுதித் தீரவேண் டும். வாஸ்தவத்தில் ஷ வாக்கியங்களையும் அண்ணங்கராசார் தமக்கு ஸாதகமென்று நிரூபிக்கப் புகுந்தால் அப்போது அவைகளை யும் நம் சேட்லூர்ஸ்வாமி கல்பிதமென்றே கைகூசாது எழுதிவிடச் சிறிதும் மயங்கமாட்டார். இவ்வளவு அழகாக க்ரந்த மெழுதுகிற வர்களைப் புகழ்ந்து உச்சஸ்தானத்தில் ஏற்றிவைப்பதற்கு நம்

ராயம் பேட்டை வித்வானே ஏற்றவர். இவரும் கத்யத்ரயத்தை தேசிகபாஷ்யத்துடன் தேவநாகரலிபியில் அச்சிட்டிருக்கிறார். அதி லும் (பக்கம் 89ல்) ஷை ப்ரணம்ய பதம் ஸ்பஷ்டமாக வுள்ளது. இவர்களுக்கெல்லாம் ஜநஸ்தாநம் போன்றதும் ப்ரக்ருத ப்ரணம நிஷ்கர்ஷக்ரந்தம் அச்சிடப்பெற்ற இடமுமான கோமளாம்பா அச்சுக் கூடத்திலும் கத்யத்ரயமூலம் பதிப்பிக்கப் பட்டுள்ளது. அதிலும் இந்த ப்ரணம்ய பதமுள்ளதே. ஆக, கிரந்தகாரரும் அபிநந்தன கர்த்தாவான முகவுரைகாரரும் மைபடியவைக்கிற வியாபாரி சைலீ யான முத்ரணகாரரு முட்பட எல்லாரும் அச்சிட்ட புஸ்தகங்களில் நிராபாதமாகக் காண்கிற ஒருபதத்தை அண்ணங்கராசாருடைய வா தத்திற்கு அஞ்சி ப்ரக்ஷிப்த மென்று ஒருவர் எழுதுகிறதும் அதை ஒருவர் ச்லாகிப்பதும் அதை ஒருவர் வெளியிடுவதுமாய் ஒரு க்ரந் தம் வெளிவந்தால் இதனால் தேசிக ஸம்ப்ரதாயத்திற்கும் தேசிக ஸூக்தி ஸம்ரக்ஷண ஸபையாருக்கும் எவ்வளவு கௌரவமென்பதை ஒவ்வொரு பிராமாணிகரும் பரிசீலிக்கலாம். ஷைப்ரணம்ய பதமில் லாமல் ஒரு ஓலை ஸ்ரீ கோசமாவது ஒரு பதிப்பாவது ஒருவருடைய பாடமாவது நிரூபிக்க இவர்களாலாகுமா? ஸாமாந்யக்ரந்தமா அது?

தவிரவும், இந்த மஹாமஹோபாத்யாயர்கள் பெரிய பரமைகாந் திகளல்லவா? இவர்கள் நித்தியம் சயனிக்கும்போது ஸ்ரீ வைகுண்ட கத்யம் அநுஸந்தியாமலிரார்களே. சயநாவகாசமே யில்லாமல் இதஸ் ததஸ்ஸஞ்சாரமேதான் எமக்குள்ள தென்றாலும் காதாசித்கமாகவா வது க்ருஹே சயநம் நேராமற் போகுமோ? அப்போது, ஷை விவா தஸ்தலத்தில் ப்ரணம்ய பதத்தை விட்டுவிட்டா இவர்கள் அநுஸந் தித்து வருகிறார்கள்? அப்படியானால் தாங்கள் பதிப்பித்த புஸ்தகங் களில் ஏன் அந்த பதத்தை எடுக்காமல் விட்டிருக்கிறார்கள்? 'இது அர்வாசீநபாடம்' என்றாவது கீழே ஒரு டிப்பணி யெழுதியிருக்க லாமே. அப்போது உறங்கிவிட்டு இப்போது அண்ணங்கராசாருக்கு ஸரியான பதில் சொல்லத் தம்மாலாகாமற் போய்விடவே 'அது கல் பிதம்' என்று வெகு கம்பீரமாக எழுதிவிடுவது என்ன ப்ரசண்ட பாண்டித்யம்!. இது என்ன ப்ராமாணிகத்வம்!,

"அப்படி அந்தப் பதம் இருப்பதாக வைத்துக் கொண்டா லும்" என்று தொடங்கி மேலே வேறொரு ஸமர்த்தனம் எழுதி

யிருக்கிறோமே என்று சொல்லவருவர்கள். இது என்ன வாக்யார்த்தம்!. ஆச்சரியமான ஸமாதானங்கள் இனி ஆயிரந்தான் சொல்லட்டும்; அவிச்சிந்ந அநுஸந்தாந பரம்பரையிலே வந்துகொண்டிருக்கிற திவ்ய ஸூக்தியிலே மிகவும் அநாவச்யகமாகவும் ஆத்மவஞ்சனைக்கு அஞ்சாமலும் அதிஸாஹஸமாக ஒரு ஸ்ரீ ஸூக்தியை கல்பிதமென்று எழுதுகிறவிவர்கள் 'செல்லாத காசு' என்கிற கோஷ்டியில்தானே நிற்கக்கூடியவர்கள். ஸரியோ தப்போ, பிற்பாடு எழுதியுள்ள ஸமாதானத்தை முந்துற எழுதிவிட்டு பிறகு "வஸ்து தஸ்து, இந்த பதம் மூலத்திலுள்ள தென்பதுவே ஸந்தேஹாஸ்பதம்" என்றெழுதி வைத்திருந்தாலாவது, தொலையட்டும் என்னலாம். அப்படியெழுதுவதுங்கூட ஸாஹஸந்தான். ஆனாலும் ஒருவாறு அதைக் காணக் கண்ணிட்டிருக்கலாம். அதையும் விட்டு இவரே வெகு துணிச்சலாக இப்படி யெழுதினால் "தேசிகனுடைய ஸ்ரீ பாஞ்சராத்ரரக்ஷையில் ப்ரதக்ஷிண ப்ரணாமாந் யுக்மாநேவ குர்யாத் என்கிற வாக்கியம் கல்பிதம்" என்று அண்ணங்கராசார் எழுதி யிருப்பதை மேளதாளங்களுடன் அபிநந்திக்க என்ன தடை?

இவர்களுடைய அப்ராமாணிக சிகாமணித்வத்தை ஸ்தாலீ புலாகந்யாயேந நிரூபித்தபடியிது இப்படி அநேகமுண்டு. இன்னமொரு சிறிய விஷயம் பாருங்கள். ஞானம் ஸம்பாதிக்க விருப்பமுடையவர்கள் ஸம்ப்ரதாய பேதங்களைக் கணிசியாமல் ப்ராஹ்மண ஸமுதாயத்தில் ஜ்ஞாதாக்களாக யார் இருந்தாலும் அவர்களிடத்தில் சிஷ்யவ்ருத்தி பண்ணி சாஸ்திரங்களை அதிகரிப்பது நமக்கு பிரத்யக்ஷத்திலுள்ளது. வடகலையாரிடத்தில் தென்கலையாரும் தென்கலையாரிடத்தில் வடகலையாரும் ஸ்ரீ வைஷ்ணவர்களிடத்தில் ஸ்மார்த்த மாத்வர்களும் அவர்களிடத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களும் சிஷ்யர்களாயிருந்து சாஸ்த்ரங்களை அதிகரிப்பது எங்குமுள்ளது. தென்கலையாரில் ஜகத்ப்ரஸித்த வித்வான்களாக விளங்கின குன்றபாக்கம் சீமாச்சார்ஸ்வாமி என்பவரும் புரிசை ஸ்ரீ ரங்காசார்ஸ்வாமி என்பவரும் வடகலை வித்வான்களிடத்தில்தான் வாசித்து வியாபகர்களானார்கள். இப்போது மஹாவித்வானாக விளங்கிவருகின்ற கபிஸ்தலம் ஸ்வாமியும் இஞ்சிமேடு [சின்ன அழகியசிங்கர்] ஸ்வாமியும் மற்றும் பலரும் அந்த புரிசை ஸ்ரீரங்காசார்யஸ்வாமியிடமே சிஷ்

யாநுசிஷ்யர்களாயிருந்தவர்களென்பதை யாரும் அபலபிக்கமாட்டார்கள். இவ்விதமாகவே காஞ்சியில் அபரதேசிகனாக விளங்கின ஸ்ரீமத் திருப்புட்குழிஸ்வாமியும் ஒவ்வொரு மஹானிடத்திலே ஒவ்வொரு சாஸ்த்ரங்களை அதிகரித்தாரென்பது விச்வப்ரஸித்தம். ஷை திருப்புட்குழி ஸ்வாமியை நேரில் ஸேவித்தவர்களும் அவர் வாசித்ததைப் பார்த்தவர்களும் அத்யாபி ஜீவித்திருக்கிறார்கள். அந்த ஸ்வாமி வியாகரணசாஸ்த்ரம் லகுகௌமுதி தொடங்கி மஹாபாஷ்யாந்தம் யாரிடத்தில் வாசித்தாரென்பதை காஞ்சீ அய்யா ஸ்ரீ க்ருஷ்ணதாதாசார்ஸ்வாமி முதலானவரை நாளைக்கும் கேட்கலாம். ஜடப்ரோல் ஸம்ஸ்தான மஹாவித்வான், சப்தகுணேத்தீபம் ரங்காசார்ஸ்வாமியென்கிற தென்கலைவித்வான் காஞ்சீபுரம் வடவண்டை மாடவீதியில் எழுந்தருளியிருந்தவர். அவரிடத்தில்தான் திருப்புட்குழி ஸ்வாமி வியாகரணம் வாசித்தவரென்பது ஸுப்ரஸித்தம். இது திருப்புட்குழி ஸ்வாமியின் சரித்திரஸங்கிரஹத்திலும் அபலாப மின்றியே எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். இப்படியே ஸ்ரீ பெரும்பூதூர் எம்பார் ஜீயர்ஸ்வாமியிடத்திலும் (பூர்வாச்ரமத்தில்) ந்யாயசாஸ்த்ரத்தில் சில க்ரோடபத்ரங்களும் மீமாம்ஸையில் சில க்ரந்தங்களும் திருப்புட்குழிஸ்வாமி வாசித்தவராம். இதை நமஸ்கார தத்வத்தில் (பக்கம் 6ல்) அண்ணங்கராசார் குறிப்பிட்டிருந்தார். இதை மறுக்க வேண்டிய அவசியமேயில்லை. க்ரந்தத்திற்கு இதெல்லாம் ஒரு விஷயமேயன்று. இப்படியிருக்க, நம் சேட்லூர்ஸ்வாமி ப்ரணும நிஷ்கர்ஷத்தில் (பக்கம் 18ல்) "திருப்புட்குழிஸ்வாமி பகல் தீவட்டி வெங்கடாசார்யரிடம் ஸாமாந்ய சாஸ்திரமும் ஸ்ரீரங்கம் (வெத்தல்ஸ்வாமி யென்கிற) ஆண்டவனிடத்தில் வேதாந்தசாஸ்திரமும் அதிகரித்தவர்; [வேறு யாரிடத்திலும் புஸ்தகம் பிடித்ததில்லை.] இது திருப்புட்குழி ஸ்வாமி செய்தருளியிருக்கும் க்ரந்தங்களின் மங்கள ச்லோகத்தினல் ஏற்படும்" என்றெழுதியிருக்கிறுர்.

பிராமாணிகர்கள் இங்கே கவனிக்கவேண்டும். திருப்புட்குழி ஸ்வாமியின் க்ரந்தங்கள் பல அச்சிடப்பட்டுள்ளன. வேதாந்த ஸம்பந்தியான க்ரந்தமாயிருந்தால் அதில் அத்யாத்மசாஸ்த்ர ஆசார்யரான ஆண்டவனுடைய ஸ்மரணம் செய்வதுண்டு. ஸாமாந்ய சாஸ்த்ர ஸம்பந்தியான க்ரந்தமாயிருந்தால் ஒரு உபாத்யாயரையும்

ஸ்மரிப்பதில்லை. அந்த ஸ்வாமி ஸாதித்து அச்சிடப்பட்டுள்ள பாட்டஸாரம் என்கிற க்ரந்தத்தைப் பார்க்கலாம். அதில் ஒரு ஆசார்யர்க்கும் மங்களச்லோகமில்லை. ஷை ஸ்வாமி தர்க்கசாஸ்த்ரத்தில் அநேக க்ரோடபத்ரங்கள் எழுதியிருக்கிறாரன்றோ; அவற்றிலும் பார்க்கலாம். ஸ்ரீ ராமசந்த்ரஸ்மரண மிருக்குமே யன்றி, இன்னாரிடத்தில் நான் இன்னசாஸ்திரம் வாசித்தேனென்பதை ஷை ஸ்வாமி ஒரு மங்களச்லோகத்திலும் காட்டவில்லை. ஷை ஸ்வாமி எம்பார் ஜீயரிடத்தில் வேதாந்த மதிகரித்ததாக அண்ணங்கராசார் எழுதவில்லை. உண்மையில் எம்பார் ஜீயரிடத்தில் ஷை திருப்புட்குழிஸ்வாமி எதிலும் ஒரு அக்ஷரமும் க்ரஹித்தவரன்று என்பதே பரமார்த்தமாக இருந்தாலும் அதை நிரூபிக்க வேணுமானால் சேட்லூர்ஸ்வாமி எப்படி யெழுதவேண்டும். திருப்புட்குழிஸ்வாமி ஸாதித்த க்ரந்தங்களின் மங்களச்லோக மென்று ஏதோ ப்ரஸங்கிக்கிறீரே, இது காசுக்காவது உதவுமா? ஷை திருப்புட்குழிஸ்வாமி நான்கு திருநாமங்களிடத்தில் பிரதானமாக சாஸ்த்ரங்கள் அதிகரித்ததாக பாட்டஸார பூமிகையில் ஸ்ரீ காஞ்சீ ஸ்ரீ சைலதாதாத்வரீ எழுதி வெளியிட்டிருக்கிறார். அந்த அத்யாபகர்களையெல்லாம் அந்தஸ்வாமி மங்களச்லோகத்தில் காட்டியிருந்தாலன்றோ சேட்லூர் ஸ்வாமி இப்படியெழுதலாம். ஆண்டவனொருவர்க்கு ச்லோகம் பண்ணியிருப்பதைக்காட்டி எம்பார் ஜீயரிடத்தில் வாசிக்கவில்லையென்பதை ஸ்தாபிக்க விரும்புகிற இவருடைய புத்திவிலாஸத்தை என்ன சொல்லுவோம்? 'எம்பார் ஜீயரிடத்தில் நான் ஒன்றும் வாசித்ததேயில்லை' என்றுவது, 'பகல்தீவட்டி வெங்கடாசாரியரிடத்திலேயே நான் எல்லாசாஸ்திரங்களும் வாசித்துவிட்டேன்' என்றுவது மங்களச்லோகங்களில் திருப்புட்குழிஸ்வாமி ஸாதித்திருக்கிறாரோ? எதிரி என்ன அம்சத்தை விவக்ஷித்து எழுதியிருக்கிறாரென்பதைச் சிறிதும் தெரிந்துகொள்ளாமலே ஆம்ராந் ப்ருஷ்ட: கோவிதாராந் ஆசஷ்டே என்றாப்போலே ஒன்றுகிடக்க வொன்று எழுதிவைத்திருக்கின்ற க்ரந்தத்திற்கு அபிநந்தனம் கொடுக்க ஸத்யமாய் ராயம்பெட்டை யொருவரே உரியவர்.

ஷெ ராயம்பெட்டை வித்வான் தனது முகவுரையில் எழுதுகிறார்— "இந்த க்ரந்தத்திலுள்ள கண்டனங்கள் நமஸ்காரதத்வத்தில் ஊடுருவிச் செல்வதை......யதார்த்த பண்டிதர்கள் ஆரத்தீர ஆராய்ந்து பார்த்து ஸந்தோஷிப்பார்களாக" என்கிறார். கீழே நாம் விவரித்த ரீதியிலே பார்த்தால் வெறும் ஸந்தோஷமா? பரமஸந்தோஷமன்றோ பண்டிதர்களுக்குண்டாகும். "அஹோ! கர்த்தபகாநேஸ்ருகால விஸ்மய:"* இப்படி க்ரந்தமெழுதுவதற்கு ஒரு உபாத்யாயரும் அதைப் புகழ்வதற்கு ஒரு உபாத்யாயரும், இதை வெளியிடுதற்கு ஒரு ஸபையும் இருந்துவிட்டால் நம் தேசிகஸம்பிரதாயத்திற்கு என்ன குறை? துர்வாதிகளெல்லாரும் பறந்து ஓடவேண்டியதே. இப்படிப்பட்ட மஹாநுபாவர்கள் இதுவரை உத்ஸாஹத்தோடு கிளம்பாமையினாலே போலும் நம்முடைய தரிசனம் தாழ்ந்துகிடந்தது! இனியென்னகுறை யெழுமையுமே? காணவாரீர் பண்டிதர்காள் காணவாரீர், கையும் கற்பூரமுமாய்க் காணவாரீர்.

---

# ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியரும்
## அவரோடு பிணங்கப்புகுந்த இதர வித்வான்களும்.

—••❀••—

இதுவரையில் அண்ணங்கராசாரியர் வெளியிட்டிருக்கின்ற புஸ்தகங்களின் ஜாபிதாவைப் பாராதவர்கள் சிலரே ஆவர். வெகுநாள் வரையில் நான் அவரைப்பற்றியும் அவருடைய புஸ்தகங்களைப் பற்றியும் யாதொன்றும் தெரிந்துகொள்ள அவகாச மில்லாதவனாகவே யிருந்தேன். இருக்கையில் 1931ஹு த்தில் தேசிகனுத்ஸவம் ஸேவிக்கத் திருக்குடந்தைக்கு நான் போயிருந்தபோது அங்கே ஸ்ரீமான். உ. வே. அபிநவப்பட்டபாண—இத்யாதி ராயம்பெட்டை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அச்சிட்டு விநியோகஞ் செய்து கொண்டிருந்த "அண்ணங்கராசார்யஸ்ய அபசப்தநாநி" என்கிற வொரு துண்டுப் பத்ரிகையைப் பெற்று அதிலிருந்து சில விஷயங்கள் தெரிந்து கொண்டேன். அப்போது யாத்ருச்சிகமாகத் திருக்குடந்தைக்கே வந்திருந்த ஷெ அண்ணங்கராசாரியரையும் ஸந்

த்து வார்த்தை சொல்ல நேர்ந்தது. அதுமுதலாக, அவருடைய வும் அவருடைய சிஷ்யர்கள் சிலருடையவும் வெளியீடான புஸ்தகங்க ளெல்லாவற்றையும் வாங்கி வாசிக்க ஊக்கங் கொண்டேன். அவற்றை வாசித்து வருகையில் அவருடைய சில புஸ்தகங்களுக்கு பதில் எழுதியும் தகுந்த வித்வான்களைக் கொண்டு எழுதுவித்தும் வெளியிடவேணு மென்றும் எண்ணங் கொண்டேன். அந்த ஸமயத்தில், கீழ்க்குறித்த ராயம்பெட்டைப் பண்டிதருடைய பிரசுரத்திற்குக் கண்டனமாக அண்ணங்கராசார் வெளியிட்ட ரஸிகபுதரஞ்ஜநத்தைப் பெற்று அதைப் பலகால் வாசித்து அதன்பிறகு வேறுவிதமான மன நிலைமையை அடைந்தேன். அதைப் பிறகு விஜ்ஞாபிக்கிறேன். அண்ணங்கராசாரியர் இயற்றிய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களில் சில அபசப்தங்களிருப்பதாக ராயம்பெட்டைப் பண்டிதர் லக்கங்கள் கொடுத்து எழுதியிருந்தவற்றுக்கு அண்ணங்கராசார் ஷை ரஸிகபுதரஞ்ஜனத்தில் ஸமாதானங்க ளெழுதியிருக்கிறு ரென்னும் விஷயம் கிடக்கட்டும். அது இப்போது நமக்கு விஷயமல்ல. அதற்கு முன்னே அவர் அவதாரிகா ரூபமாக 13 பக்கங்கள் எழுதியிருக்கிறார். அதை நான் அடிக்கடி வாசித்தும் ஆப்தர்களுக்கு வாசித்துக் காட்டியும் வருவது வழக்கம். அந்த ரஞ்சந க்ரந்தத்தில் ஷை 13 பக்கங்கள் வெகு அழகாகவும் அற்புதமாகவும் யதார்த்தமாகவும் ராயம்பெட்டைப் பண்டிதர் போல்வாருடைய கிளர்ச்சி அடியோடு அவகாச மற்றதென்று விளக்கிக் காட்டவல்லதாகவும் அமைந்திருக்கின்ற தென்பது அனேக பிராமாணிக பண்டிதர்களின் அபிப்ராயம்.

திருக்குடந்தையிலேயே வாழ்ந்தவரும் பிரபல வித்வானுமாகிய ஸ்ரீ. உ. வே. கொட்டையூர் சேஷசாயி ஸ்வாமி யென்கிற தேசிக பக்த மஹாவித்வான் ஷை ரஸிகபுதரஞ்ஜந க்ரந்தத்தைக் கடாக்ஷித்துவிட்டு ஆநந்தபரவசராய் அண்ணங்கராசாருக்குப் பத்ரிகை யெழுதுகையில்,

"భవతాం శ్రీసూక్తిసేవనేన అకపటమావిర్భూతా కృతిరియం దాసేన సమర్ప్యతే"

என மகுடமிட்டு அந்த ரஞ்ஜந க்ரந்தத்தின் அபாரமான பெருமையையும் அந்த க்ரந்தத்திற்கு விஷயபூகரான ராயம்பெட்டையவருடைய தன்மைகளையும் விளக்கிப் பன்னிரண்டு ச்லோகங்கள் ஸாதித்திருக்கிறுரென்பதும் அவற்றில் சில ச்லோகங்கள் ஸர்வஸ்வ

ரக்ஷா முதலிய க்ரந்தங்களில முன்னமே அச்சிட்டு வெளிவந்திருக்கின்றன வென்பதும், அவற்றுள் ராயம்பெட்டையவருடைய முக்கிய மாஹாத்மிய பரதீபமான

"తంద్రాళవోఽపి బహుకోశసమీక్షణేషు స్వీయప్రథాప్రసరణైకఫలా అనుచ్చాః
వర్ణచ్యుతిం విరలవర్ణనివేశనంచ వాక్యస్థచిహ్నవిరహంచ నిరూపయన్తి॥"

என்கிற ச்லோகம் விசேஷ வியாக்கியானத்தோடும் வெளிவந்திருக்கின்ற தென்பதும் ஷை ராயம்பெட்டையவருடையதான மர்மப்ரகாச புஸ்தகத்திலிருந்தே ஸ்பஷ்டமாக அறியக்கூடியதே. இத்தகைய பெருமை வாய்ந்ததும் ராயம்பெட்டையவருடைய ஆசார்யரான ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியாலும் "ரஸிகபுதரஞ்ஜனத்தைப் பலகால் வாசித்துப் பார்த்தேன்; எல்லா விஷயத்திலும் க்ரந்தம் அந்வர்த்தநாமமாகவே யிருக்கிறது" என்று அபிநந்தந ஸ்ரீமுகமருளப் பெற்றதுமான அந்த ரஸிகபுதாஞ்ஜன க்ரந்தத்தின் மீதும் மர்மப்ரகாச மென்கிற பதில் புஸ்தகத்தை வெளியிட்ட ராயம்பெட்டையவர், அதற்குக் கண்டனமாக அண்ணங்கராசாரியால் உடனே வெளியிடப்பட்ட உபதேச ரஸாயநஸார மென்னும் ஆச்சரியமான புஸ்தகத்தினல் இருபத்தேழு மாதங்கள் தலைமடிந்து கிடந்து, அந்த ஸங்கதிகளெல்லாம் ஒருவாறு உலகுக்கு மறந்துபோயிருக்கலாமென்று தானுகவே நினைத்துக்கொண்டு இப்போது கொஞ்சம் தலைகாட்ட ஆரம்பித்திருக்கிறுர். ஆனல், பழைய விஷயங்களைத் தொடாமலே வெகு தளுக்காக வெளிவருகின்றுர். 'அண்ணங்கராசாரியர்' என்னும் பெயரைக் கையாலெழுதவும் நடுநடுங்கி "நமஸ்கார தத்வமென்று ஒருவர் எழுதிய புஸ்தகம்" என்கிறுர் பாவம்!. இருக்கட்டும்.

இப்போது 'ப்ரணம நிஷ்கர்ஷம்' என்கிற புஸ்தக கர்த்தாவான சேட்லூர் ஸ்வாமியையும் அதற்கு முகவுரைகாரரான ராயம்பெட்டை ஸ்வாமியையும் மற்றுஞ்சில பண்டிதர்களையும் பற்றி இங்கு முக்கியமான சில விஷயங்களை வித்வான்களுக்கு விளக்கிக் காட்ட வேண்டியது அவசியமாகவே யிருக்கின்றது. அண்ணங்கராசாருடைய க்ரந்தங்களின்மீது படை யெடுக்கத் தொடங்கிப் பதுங்கின பண்டிதர்கள் பலபேர்கள். அவர்களை முதலில் நான்கு வகுப்பாகப் பிரித்துக் காட்டுகிறேன். 1. அண்ணங்காசாருடைய வேத

லக்ஷண விசாரபரங்களான க்ரந்தங்களைக் கண்டிக்கப் புகுந்தவர்கள். 2 அவருடைய தமிழ்ப் பாண்டித்யத்தின்மீது குறைகூறப் புகுந்தவர்கள். 3. அவருடைய ஸம்ஸ்கிருத பாண்டித்யத்தின்மீது குறைகூறப் புகுந்தவர்கள். 4 அவருடைய ஸம்பிரதாய க்ரந்தங்களைக் கண்டிக்கப் புகுந்தவர்கள் என நான்கு வகுப்பு.

இதில், (1) திருக்குடந்தை அக்னிஹோத்ர தாதாசார்ய ப்ரப்ருதிகள் சிலரும், அழிசூர் திருமலாசாரியர் என்பவரும், மன்னார்குடி கனபாடி நரஸிம்ஹாசாரியர் என்பவரும் இன்னுஞ்சில பேர்களும் முதல் வகுப்பைச் சேர்ந்த பிரதிவாதிகள். (2) திருக்குடந்தை சின்னமு ஸ்ரீநிவாஸ பாட்டராசார் முதலான சிலர் இரண்டாம் வகுப்பைச் சேர்ந்த பிரதிவாதிகள் (3) ராயம்பெட்டை கிருஷ்ணமாசாரியர், திருவையாறு காலேஜ் ப்ரொபஸர் வேளிய நல்லூர் ஸ்ரீநிவாஸ தாதாசார் ஆகிய இருவர், மூன்றும் வகுப்பைச் சேர்ந்த பிரதிவாதிகள். (4) சேட்லூர் நரஸிம்ஹாசாரியர், மதுரை நாராயணய்யங்கார்' புத்தங்கோட்டை ஸ்ரீநிவாஸாசாரியர் முதலான சிலர் நான்காவது வகுப்பைச் சேர்ந்த பிரதிவாதிகள். சோழவரம் தட்டை முதலான சிலதுகள் இந்த ஸமாஜத்தில் பரிகணநம் பெறத் தகாதவைகளென்று விடப்பட்டன. ஆக இந்த நான்கு வகுப்பிற் சேர்ந்தவர்களில் பெரும்பாலர் அண்ணங்கராசாரியரை முதலில் தாங்களாகவே புகழ்ந்துவிட்டுப் பிறகு தூஷிக்க ஆரம்பித்தவர்களென்பதும் பல புஸ்தகங்களினால் வெளிவந்துள்ளதே.

மேலே குறிக்கப்பட்ட பிரதிவாதிகளெல்லாரும் அண்ணங்கராசாரியரோடு எதிரம்பு கோக்க எப்போது ஆரம்பித்தார்களென்றால், அவர் வேதலக்ஷண விசாரபரமான வேதாத்யயந ஸர்வஸ்வம் முதலான க்ரந்தங்களை வெளியிட்ட பின்புதான் [அதாவது, இப்போது மூன்று நான்கு வருஷங்களுக்குள்ளாகவே] என்பது எல்லாருடைய ஞாபகத்திலு மிருக்கவேண்டும். அண்ணங்கராசாரியர் இளம்பிராயந் தொடங்கியே க்ரந்தங்களெழுதி வருவதாகவும் அவை தமக்குக் கிடைத்துக் கொண்டுவந்ததாகவும் ராயம்பெட்டை கிருஷ்ணமாசாரியரே தமது துண்டுப் பத்ரிகையில் பிரசுரஞ் செய்திருக்கிறார். சுமார் 20 வருஷகாலமாக அந்த க்ரந்தங்களைப பெற்று அநுபவித்துக் கொண்டுவந்த அவர் அவற்றுக்குக் கண்டனமெழுத நினைத்தது

மில்லாததோடு மண்டனமே யெழுதி அண்ணங்கராசாருக கனுப்பி யிருக்கிருரென்பது ரஸிகபுதராஞ்சநத்தில் (பக்கம் 12ல்) ஸ்பஷ்டம். அதாவது, ரீாயம்பெட்டையவர் அண்ணங்கராசாருக்குக் கடித மெழுதி யிருக்கிருராம்— "ஸ்வாமி இதற்குமுன்பு அனுப்பிய புஸ்தகங்களும் இப்போதனுப்பிய புஸ்தகமும் வெகு ஆதரவோடு அடியேனல் பெற்றுக் கொள்ளப்பட்டன; பலவிதங்களிலும் தேவரீருடைய ஆராய்ச்சி வல்லமை வாசாமகோசரமாகவே யிருக்கின்றதென்பதை மாத்திரம் இப்போது விஜ்ஞாபித்துக் கொள்ள சக்தனு யிருக்கிறேன்" என்று ராயம்பெட்டையவர் எழுதியிருப்பதான கடிதத்தை அண்ணங்கராசார் வெளியிட்டிருக்கிருரல்லவா? அந்தக் கடிதம் உண்மையாக எழுதினதுதானென்பதை ராயம்பெட்டையவரும் தமது மர்மப்ரகாச நூலில் வெளியிட்டுக்கொண்டார். அதாவது, (அதில் பக்கம் 4ல்) அண்ணங்கராசாருக்கு அப்படிப் பட்டகடிதம் தான்எழுதினதாகவே ஞாபகம்என்கிருர். அப்போது அண்ணங்கராசாருடைய ஒன்றிரண்டு க்ரந்தங்கள் தமக்கு ருசித்திருக்கலாமென்கிருர். ஏதோ தாக்ஷிண்யத்திற்காகவோ ஸௌஜந்யத்திற்காகவோ அப்படி எழுதிவிட்டோமென்கிருர். வாஸ்தவத்தில், சேட்லூர்ஸ்வாமியின் பல துருக்திகளைக் கண்டித்து அண்ணங்கராசார் வெளியிட்ருடிருந்த சேஷாவதாரச்சிறப்பு, ஸ்தோத்ரவ்யாக்யாந சோதனம், வாத்ஸல்யார்த்த விவரணம் முதலிய ஸஞ்சிகைகளைப்பற்றிப் புகழ்ந்தே ராயம்பெட்டையவர் கடிதமெழுதியிருப்பதாக அண்ணங்கராசார் கண்ணுடி போல் மூதலித்துக் காட்டுகிருர். அப்படியில்லையென்ருவது. 'சேட்லூர்ஸ்வாமி எழுதியிருப்பதெல்லாம் பிராமாணிகம் யுக்தம்' என்ருவது இந்த ராயம்பெட்டையவரால் வாய்திறக்கவும் முடியாதென்பதை எந்தஸபையிலும் ஸ்தாபிக்க முடியும். ஸமயந்தான் நேரவேண்டும்.

முதல் வகுப்புப் பிரதிவாதிகளான திருக்குடந்தை அக்நி ஹோத்ரிகளும் மன்னுர்குடிக்காரரும் அழிசூரரும் இப்போது எங்கிருக்கிருர்களென்றே கண்டுபிடிக்க முடியாத நிலைமையில் இருந்து வருகிருர்கள் கடைசியாக அண்ணங்கராசாருடைய பரமார்த்த பரித்ராண க்ரந்தத்தோடும் அவரது சிஷ்யருடைய ஸர்வஸ்வ ரக்ஷாவதரண, சாஸ்த்ரஜ்ஞான சாணபலகங்களோடும் இவர்களுடைய

கோலாஹலங்களெல்லாம் கடல் புகுந்தொளிந்து கிடக்கின்றன. திருவையாறு காலேஜ் பிரபல வித்வானுயிருந்த வெண்ணுற்றங்கரை சீமாச்சார் ஸ்வாமியும் இதில் கொஞ்சம் பிரவேசித்துப் பங்க மடைந்து போனுரென்பதும் பிரஸித்தமான விஷயமாக நின்றிருக் கிறது. இப்படியே நாம் கீழே குறிப்பிட்டுள்ள ஒவ்வொரு பிரதி வாதிகளும் தாங்கள் முதலில் கிளம்பும்போது என்னவோ நினைத் துக் கொண்டு உத்ஸாஹமும் அட்டஹாஸமுமாய்க் கிளம்பிவிட்டு, பிறகு அவருடைய பதில்க்ரந்தம் வெளிவந்தவுடனே இருந்தவிடம் தெரியாமல் பதுங்கி பொதுங்கி மங்குகிறுர்கள். இப்படிப்பட்டவர் கள் ஆருமில்லாத இடங்களில் அச்வமேதம் செய்வதோ வாசாம கோசரம். அண்ணங்கராசாரியரைக் கண்டித்துத் தொலேத்துவிட் டோமென்று சில அஜ்ஞர்களிடம் ஆரவாரிக்கிறுர்கள். உண்மை யில் பார்த்தாலோ, இவர்களுடைய வாதங்களே யெல்லாம் லப்ர மாணமாகக் கண்டித்தொழித்து 'ஆண்பிள்ளேயாயிருந்தால் இதற்கு மேல் விஷயம் சொல்லுங்கள்' என்று அறைகூவியே அண்ணங்கராசார் தமது க்ரந்தத்தை முடித்திருக்கின்றுர். அந்த வேதவிசார ப்ரதிவாதி களும் அவர்களுக்கடுத்த சின்னுமுஸ்வாமியும் முதலானுர் கும்பகோண பிசாசோச்சாடநமந்த்ர மஹோததியின் முதல்தரங்கத்தில் முழுகினவர் களாகி இன்னமும் முழுகினபடியே யிருக்கின்றுர்களாதலால் அவா களேப்பற்றி நாம் இங்கு அஞ்ஜலிசெய்து நிற்பதே உத்தமம். மூன் றுவது வகுப்பினருள் ஒருவரான வேளியநல்லூர் ஸ்ரீநிவாஸதாதா சாரியர் 'பரிபந்தி' சப்தவிஷயமான விசாரத்தில் நுழைந்து விவா தம் நடத்தி, உடனே அண்ணங்கராசாருடைய பரிபந்தி பஞ்சபங்கீ க்ரந்தத்தினுல் உண்மை தெளிந்து ஓய்ந்தனராதலால் அவருக்கும் அஞ்ஜலி செய்வதே ப்ராப்தம். நான்காவது வகுப்பினருள், ஆச்சான் பிள்ளேயின் ரஹஸ்யார்த்த விஷயத்தில் அண்ணங்கராசா ருடைய நிரூபணங்களுக்கு விடையளிக்கப் புகுந்து கடைசியாய் அவருடைய ரக்ஷாவிலோசநபாவப்ரகாசிகையினுல் உண்மை தெளிந்து கையொழிந்த மதுரைநாராயணருக்கும் புத்தங்கோட்டம் ஸ்வாமிக்கும் அஞ்ஜலியே அமையும்.

புத்தங்கோட்டம்ஸ்வாமி ஸமீபகாலத்தில் வெளியிட்டுள்ள தூஷணுப்ஸர்ண மென்னும் துண்டுபத்திரிகையில் (அண்ணங்கரா சாருக்கு) பதில் எழுதாமலிருப்பதே உசிதமாகத் தோன்றுவதாய் எழுதி முடித்துவிட்டார். இந்த விரக்தியை இவர் முதலிலேயே வஹித்திருக்கலாமே. இவருக்கு அஞ்ஜலியோடு ப்ரணமமும் ஸமர்ப்பிக்க ப்ராப்தம்.

இங்ஙனம் இப்போது நம்முடைய அஞ்ஜலியைப் பெறுகின்ற விவர்கள் ரோஷந் தலையெடுத்து மீண்டும் எதையாவது எழுதவும் தலைப்படுவர்கள். அப்படி அவர்கள் எழுதத் தலைப்படவேணுமென் கிற ஆவல் தூண்டவே நாம் இதனை எழுதுகின்றோம். ஆனால் அவர்கள் எழுதவேண்டிய வழியை விட்டு வேறுவழியில் நுழைந்து கச்மலமாக எதையேனும் எழுதுவார்களாகில் மறுநாளிலேயே மந்த்ர மஹோததியின் இரண்டாவது தரங்கம் வந்து அவர்களை அமுக்கியே தீரும். ஆதலால் கோணல் வழிகளைவிட்டு எவரெவர் கள் எந்தெந்த விஷயங்களுக்கு பதில் சொல்லக் கடமைப் பட்டவர் களாக அண்ணங்கராசாருடைய கிரந்தங்களினால் முடிவு பெற்றிருக் கிறார்களோ அவரவர்கள் அந்தந்த விஷயங்களை மாத்திரம் எடுத்துக் கொண்டு ஸமாதான வழிகளை நிரூபிப்பார்களாகில் அதுவே உண் மையான பாண்டித்யத்திற்குப் பொருந்தியதாகும். கீழ் வெட்டுக ளால் யாரும் ஒருநாளும் வெற்றிபெற முடியாது.

இனி இரண்டு நபர்களைப் பற்றியே பரிசீலனை செய்ய இப் போது ப்ராப்தமாக வுள்ளது. அவர்களாவது, ப்ரக்ருத ப்ரணம நிஷ்கர்ஷ க்ரந்தகாரரான சேட்லூர் ஸ்வாமியும் இதற்கு முகவுரை காரரான ராயம்பெட்டை பட்டபாணரும்.—கீழே நாம் குறிப்பிட்ட நபர்களைப்போலே இவர்களும் அண்ணங்கராசாருக்கு சாஸ்த்ரீய ஸரணியில் பதில் சொல்ல வேண்டியவர்களாக அநேக விஷயங் களில் கடமைப்பட்டிருக்கிறார்கள். அந்த பதில்களை அனேக பண்டி தர்கள் மிக்க ஆவலோடு வெகுகாலமாகவே எதிர் பார்த்துக்கொண்டு மிருக்கிறார்கள். எந்த விஷயங்களுக்கு? என்றால், அவற்றை இதோ வரிசையாகக் குறிப்பிடுகிறேன். இவை அவசியம் பதில் சொல்ல வேண்டிய விஷயங்களா அல்லவா? என்பதையும், எத்தனை யுகமா

றும் பதில் வெளிவர ப்ரஸக்திதானுண்டா என்பதையும் உண்மையான வித்வான்கள் நிஷ்கர்ஷித்துக் கொள்ள வேண்டியது.

ஸ்ரீமதுபயவே. சேட்லூர் ஸ்வாமியின் நூல்களில் அண்ணங்கராசாரும் அவரது சீடர்களும் உபபாதநம் செய்திருக்கிற தவறுகள்.

## 1. சேஷாவதாரச் சிறப்பு.

சேட்லூர் ஸ்வாமியைப் பற்றி எழு வருஷங்கட்குமுன் முதல் முதலாக அண்ணங்கராசார் வெளியிட்ட க்ரந்தம் சேஷாவதாரச் சிறப்பு. ஸ்ரீபாஷ்யகாரர் சேஷாவதாரமல்லவென்று சேட்லூர் ஸ்வாமி எழுதியிருந்ததற்கு மேல் இது கண்டனமாக வெளிவந்தது. இதிலுள்ள 24 பக்கங்களுக்கும் அவர் பதில் சொல்ல வேண்டியவரே. ஆனால் அதை நாம் அபேக்ஷிக்கவில்லை. அனேக ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளினால் சேஷாவதாரத்வமே ஸ்பஷ்டமாக விளங்குகின்றதென்று அவர் நிரூபித்திருக்கிற விஷயங்களுக்கு சேட்லூர் ஸ்வாமி எந்த பதிலாவது சொல்லிக் கொள்ளட்டும். ஒன்றும் சொல்லாமலாவது இருந்துவிடட்டும். இவருக்கு அநுபல்லவிகாரராகிய ராயம்பெட்டை ஸ்வாமி தம்முடைய கத்யபாஷ்ய பூமிகையில் "ஸ்ரீராமாநுஜாசார்யாங் சேஷஸ்ய அவதார இதி ப்ரமாணை: உபபத்திபிச் ச ஸர்வதா ப்ரதிபத்யந்தே" என்றெழுதி யிருக்கிறாராதலால் இதில் இவர்களிருவருமே பிணங்கி முடிவுகட்டிக் கொள்க. இராமாநுச நூற்றந்தாதி யருளிய அமுதனார், பாஷ்யகாரரால் கூரத்தாழ்வான் திருவடிகளில் ஆச்ரயிப்பிக்கப்பட்டவராயிருக்க, இதற்கு மாறுபாடாக, "அமுதனார் பெரியநம்பி திருவடிகளில் ஸ்ரீபாஷ்யகாரரோடு ஸதீர்த்தியராக ஆச்ரயித்தவர் என்று சேட்லூரார் எப்படி யெழுதினார்" என்று கேட்டிருக்கிறது. இதற்கும் நாம் பதில் விரும்பவில்லை. இதில் இவர் பிரமிக்க நேர்ந்த காரணத்தையும் அண்ணங்காசாரியரே நிரூபித்துவிட்டபடியால் இதில் இவரை விட்டுவிடுவோம்.

முக்கியமாக இதில் ஒரே விஷயம் கேட்கிறோம். சேஷாவதாரச் சிறப்பில் (பக்கம் 21ல்) அப்ருதக் ப்ரதிபந்ந யந்மயத்வை: வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே: என்கிற யதிராஜஸப்ததி ஸ்ரீஸூக்திக்கு, சேட்லூர் ஸ்வாமி தனக்கு ஸாஹித்ய வ்யுத்பத்தி சிறிதுமில்லாமை

விளங்கும்படி அர்த்த முரைத்திருப்பதாக அண்ணங்கராசார் நன்ருக உபபாதநம் செய்திருக்கிருர். இது ஸம்ப்ரதாய விஷயமன்று. எல்லாருக்கும் பொதுவான சாஸ்த்ர விஷயமே. இப்படிப்பட்டவொரு விஷயத்தில் இவர் தவறியிருக்கிருரென்ருல் இதனுண்மை என்னவென்று பண்டிதர்கள் பரிசீலிக்க வேண்டாமா? அண்ணங்கராசார் எழுதியிருக்கிறபடி இங்கு சேட்லூர் ஸ்வாமி தவறியிருக்கிற பக்ஷத்தில் இவர்க்கு வ்யுத்பத்தியே கிடையாதென்று நிர்ணயிக்கத்தானே நேரிடும். வாஸ்தவத்தில் அண்ணங்கராசாருக்கு வ்யுத்பத்தி இல்லையா? சேட்லூர் ஸ்வாமிக்குத்தான் அது இல்லையா? என்பதை ருஜுவாக அறிந்துகொள்ள அவசியமிருக்கிறது. இதற்கு அவசியம் பதில் வெளிவர வேண்டும். இதற்கு சேட்லூர் ஸ்வாமி தன் சிஷ்ய ரொருவரைக் கொண்டு ஏதோவொரு ஸமாதானம் வெளியிட்டிருந்தார். அதன்மேல் அண்ணங்கராசாருடைய சீடர் தாண்டவ கண்டன மண்டன மென்கிற புஸ்தகத்தை வெளியிட்டு அதில் 10, 11, 12, 13 பக்கங்களில் இவ்விஷயத்திற்கு விரிவாக வியாகரண சாஸ்திர மரியாதைகளை விளக்கிக்காட்டி, "இதனை அறிய கில்லாதவர்கள் அநாக்ராத ஸாஹித்ய கந்தர் என்னத் தட்டுண்டோ? விஷயத்தை உபபாதித்த பின்புங்கூட மூளையில் ஏறப்பெருதவர்களைப் பற்றி என்ன சொல்லுவது!" என்று வெகு அவஹேளையாக எழுதியிருக்கிருர். அதையெல்லாம் வித்வான்கள் பார்க்கவில்லையோ? "இந்த ஒரு விஷயத்திற்கு மாத்ரமாவது என்றைக்கு ஸமாதானம் எழுதினலும் அன்றைக்கே இவர் பாதத்தில் பணிந்து தேசிக தர்சநாசாரியர் இவரே யென்று பறைசாற்ற விதனையிரா நின்றேன்" என்று சேட்லூர் தாண்டவ கண்டனத்திலும் (பக்கம் 62ல்) எழுதப்பட்டிருக்கிறது. அண்ணங்கராசாரும் சேட்லூரார் மாய மயக்கத்தில் (பக்கம் 23ல்) இதே விஷயத்தை யெடுத்துக் காட்டி "இனியாவது இதற்கு விடை யளிப்பாராயின் இவர் நெற்றியிலுள்ள புண்ட்ரத்தையே இட்டுக்கொள்வே னென்பது ஸத்யம்" என்று நிர்ப்பயமாய் எழுதி வெளியிட்டிருக்கிருரே. இப்படியிருக்க இவர் ஏன் மயங்க வேண்டும்? அவர் சொல்லுகிற விஷயத்தை க்ராஹிக்கக்கூட இவர்க்கு சக்தியில்லை யென்று அவர் பன்னிப்பன்னிப் பேசியிருக்கிருரே. எத்தனை நாளைக்கு இதை அமுக்கிவைத்திருக்க முடியும்? வ்யக்தி அமுங்கியிருந்தால் விஷயமும் அமுங்

கியே யிருக்கும். அங்ஙனே யிருந்து கௌரவமாகக் காலங்கழிக்க பாக்கிய மில்லையே சேஷாவதாரச் சிறப்பில் கண்ட இந்த வொரு விஷயத்திற்கே பதில் எதிர் பார்க்கப்படுகிறது.

## 2. ஸ்தோத்ரவ்யாக்யாந சோதனம்.

இதுவும் சேட்லூர் ஸ்வாமி க்ரந்தத்தின்மேல் அண்ணங்கராசார் விட்ட சரமாரி. இதைப் பற்றி அவரே சேட்லூரார் மாயமயக்கத்தில் (பக்கம் 22ல்) எழுதி யிருக்கிறார்—

"இந்த சேட்லூர் ஸ்வாமி ஸ்தோத்ர பாஷ்ய மொழிபெயர்ப்பு வெளியிட்டார். அதன் முடிவில் பெரியவாச்சான் பிள்ளையை தூஷிப்பதற்கென்று தொடங்கி ஒரு அநுபந்தம் வெளியிட்டிருக்கிறார். "சில ஆக்ஷேப ஸமாதானங்கள்" என்று அதற்கு மகுடம் (ஹெட்டிங்கு) கொடுத்திருக்கிறார். அங்கு இவர் எழுதியிருக்கிற ஒவ்வொரு அக்ஷரத்தையும் தேசிக திவ்ய ஸூக்திகளைக் கொண்டே கண்டித்து அடியேன் வெளியிட்டிருக்கிறேன். அதற்கெல்லாம் இவர் உத்தரம் உரைக்கவேண்டா. அங்கு 'ஆக்ஷேப ஸமாதானங்கள்' என்று இவர் மகுடம் வைத்து எழுதினரே; அந்த மகுடத்திற்கும் அதன் கீழேயுள்ள விஷயங்களுக்கும் ஏதாவது ஸம்பந்தமுண்டா என்று அடியேன் கேட்டிருக்கிறேன். ஆக்ஷேபம் என்ன வென்று? ஆக்ஷேபகர்த்தா யார்? ஸமாதானம் என்ன வென்று? ஸமாதான கர்த்தா யார்? இத்யாதிகளை அடியேன் கேட்டிருக்கிறேன். இந்த வொருவிஷயத்திற்காவது இவர் ஸமாதானம் தெரிவித்தால் அன்றைக்கே இவரிடத்தில் திருவிலச்சினை பெற்றுக்கொள்ள ஸித்தனாய் இருக்கிறேன்." என்று.

இதைக் கண்ட சேட்லூர் ஸ்வாமி உடனே அவருக்கு பதில் உரைத்து அவரைத் தம்முடைய சிஷ்யராக இவர் ஏன் ஆக்கிக் கொள்ளக்கூடாது?

மேலும் அண்ணங்கராசாருடைய அந்த ஸ்தோத்ரவ்யாக்யாந சோதந க்ரந்தம் மஹாவித்வான்களையும் மிக மயக்குகின்றது. இந்த க்ரந்தத்தினால் சேட்லூர் ஸ்வாமிபானவர் வாலிகக்ஷத்தில் இராவணன் பட்டபாடு படுவதாக அவர்களால் எழுதப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட கிரந்தத்திற்குக் கண்டன மெழுதிவிட்டல்லவோ நமஸ்கார தத்வத்திற்கு எழுத இவர் புறப்படவேண்டும். "அதில் ஒன்றுக்காவது இவர் ருஜுவான ஸமாதானம் சொல்லிவிடுவாராகில்

உடனே அடியேன் ஸபரிவாரனுய் இவரைப் பணியத் தடையுண்டோ? அரைகுறை யறிவினர் இவ்வுலகில் பலருண்டு; இருந்தாலும் இப்படி உலகை வஞ்சிப்பவர்கள் வேறு யாரேனு மிருப்பதாக அடியேன் நினைக்கவில்லேன்.........ஸ்தோத்ர வியாக்யான சோதனத்தை எடுத்துப்பாருங்கள்" என்று மாய மயக்கத்தில் (பக்கம் 22ல்) இவ்வளவு மிடுக்காகவும் துணிவாகவும் அண்ணங்கராசார் வெளியிட்டிருப்பதைப் பார்த்தபின்பும் இவர் வாளா இருந்துவிட்டு இப்போது வேறொரு அநாவச்யக விஷயத்தில் கைவைத்தால் இதற்கு என்ன அர்த்தம்?

அண்ணங்கராசார், சேட்லூரர் மாயமயக்கத்தில் உபஸம்ஹாரத்தில் எழுதியிருப்பதைப் பார்த்தால் நமக்குத் தலையிறக்கமாகவே யிருக்கிறது. அங்கு என்ன எழுதி யிருக்கிறுரென்றால்:—

"சேட்லூர் ஸ்வாமியின் ஞானவூழல்களை அடியேன் நாலைந்து வருஷங்களுக்கு முன்னமே அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன். அப்போது அவர் சென்னையில் வாஸமாக இருந்ததனுல் 'இதற்கெல்லாம் என்ன ஸமாதானம் சொல்லுகிறீர்?' என்று ஒரு பிரதிநிதியை நேரில் அனுப்பிக் கேட்டுவரச் சொன்னேன். 'பதில் புஸ்தகம் அச்சுப்போட எனக்குப் பணமில்லை'. என்று விடை சொல்லி அனுப்பினர். அதற்கு மேல் அடியேன் சொல்லியனுப்பினேன்—'அதற்காக வருந்த வேண்டா; உத்தரம் எழுத சக்தி யிருந்தால் தாராளமாக எழுதலாம்; எழுதி அடியேனிடமனுப்பி விட்டால் அப்படியே 500 பிரதி அச்சிடுவித்து ஸ்வாமி ஸந்நிதிக்கு அனுப்புகிறேன்; இது ஸத்யம்—என்றேன். அதற்குப் பிறகு அவருடைய மன்னிப்புக் கடிதம் கிடைத்ததே யொழிய வேறில்லை. அதை யெல்லாம் மறந்து இப்போது ஏதோ எழுதுகிறுர். எழுதட்டும். பரம சந்தோஷம். வடமொழியிலும் தென்மொழியிலும் இவர் முழு மோசமென்று ஏற்கனவே வெகு விரிவாக வெளியிடப்பட்டுள்ள தென்பது வித்வான்களுக்கு ஞாபகத்திலேயே யிருக்கும்."

என்று எழுதி யிருக்கிறுர். உண்மையான சரக்கிருந்தால் இவ்வளவையுங் கண்டு எப்படி ஆறியிருக்க முடியும்? அண்ணங்கராசாருக்கு மன்னிப்புக் கடிதம் இவர் ஏதுக்கு எழுதவேண்டும்? அதை அவர், மாய மயக்கத்தில் (பக்கம் 2ல்) அப்படியே வெளியிட்டுவிட்டாரே அவ்வளவோடும் நிற்கவில்லையே எல்லாரையும் வலியப் பிடித்துத் தம்மிடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் அந்த மன்னிப்புக் கடிதத்தின் அஸல் காபியைக் கையில் கொடுத்து வாசிக்கச்

சொல்லி வாய்வீசுகிறுரே. இப்படிப்பட்டவர்கள் செய்கிற ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷணம் எவ்வளவுக்கு நிற்கும்? அவ்விதமாக் அண்ணங்கராசாரிடம் அபசார க்ஷாமணம் செய்து கொண்டு நேற்றுவரையில் பதுங்கிக் கிடந்த விவரை இன்று வீணுகை வெளிக்கிளப்பிவைத்தவர்களின் எண்ணம் என்னே? பழகிப்போன பட்டங்களை யெல்லாம் புதுப்பித்துக் கொள்கவென்றே? இது கிடக்க.

"தவாம்ருதஸ்யந்திநி" என்கிற ஆளவந்தார் திவ்ய ஸூக்தியில் "பாதபங்கஜே நிவேசிதாத்மா" என்ற விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை ஏகதேசாந்வய துஷ்டமாக வியாக்கியானித்து விட்டாரென்று சேட்லூர் ஸ்வாமி (4 வரி) எழுதினதின்மேல் அண்ணங்கராசார் ஏழுபக்கம் எழுதி ஏகதேசாந்வய மென்கிற விஷயத்தின் வாஸனையே சேட்லூராருக்குக் கனவிலுந் தெரியாதென்று முடித்திருக்கிறுரே. இது ஸம்ப்ரதாய விஷயமன்றே. இதை எல்லாரும் விமர்சித்து உண்மையை விளக்கலாமே. ஆகவே, ஸ்தோத்ரவ்யாக்யாந சோதனத்திற் கண்ட விஷயங்களுள் இஃதொன்றுக்கே பதில் எதிர்பார்க்கப்படுகிறது. எல்லாவற்றிலும் ஸ்தாலீபுலாகந்யாயமே.

## 3. வாத்ஸல்யார்த்த விவரணம்.

இதுவும் சேட்லூர் ஸ்வாமிக்காக அண்ணங்கராசார் விடுத்த க்ரந்தம். சேட்லூர் ஸ்வாமியானவர் கத்ய பாஷ்ய மொழி பெயர்ப்பின் முகவுரையில், ச்ருதப்ரகாசிகாசார்யரான ஸ்ரீ வேதவ்யாஸ பட்டரை மிகவும் இழிவாக தூஷித்திருப்பதை [அதாவது—அந்த மஹான், ப்ரமாண யுக்திகளுக்குப் பொருந்தாமலும் அஸத்ஸம்பிரதாயமாகவும் 'சரணுகதி கத்யத்திற்கு வியாக்யானம்' செய்திருப்பதாக கொஞ்சமும் கூசாமல் அஞ்சாமல் சேட்லூர் ஸ்வாமி எழுதியிருப்பதை] அண்ணங்கராசார் கண்டித்து 16 பக்கம் எழுதியிருக்கிறுர். ச்ருதப்ரகாசிகா பட்டரை இப்படி துஷித்த வொருவர் ஸ்ரீவைஷ்ணவராக விளங்க முடியுமா? இப்படிப்பட்டவரைக் கொண்டு தேசிகஸூக்தி ஸம்ரக்ஷணம் செய்துகொள்ள நினைக்கின்ற ஸபையார் அந்தோ! அந்தோ!!. இவ்விஷயத்தில் இதற்குமேல் எழுதக் கை ஓடவில்லை. தேசிகன் திருவுள்ளம் கன்றும்படி இப்படியும் எழுதுவாருண்டோ? கஷ்டம்! கஷ்டம்!!

## 4. ப்ரணவாதிகார தத்துவம்.

இதுவும் சேட்லூர் ஸ்வாமியின் ப்ரணவோபதேச விசாரமென்கிற ஒரு துண்டு பத்ரிகையின்மேல் அண்ணங்கராசார் வெளியிட்ட சதகோடி. இதைப்பற்றி சேட்லூரார் மறுபடியும் வாயைக்கையைத் திறந்தவரே யன்று. வேறொரு திருக்கோட்டியூரார் இதில் போராடி வருகிறார். அவரோடு ஒரு திருமணிஸ்வாமி அம்பு செலுத்தி வருகிறார். ஸமீபகாலத்தில் அண்ணங்கராசார் வெளியிட்டிருக்கிற வாதிபீகர விஜயமென்னும் க்ரந்தத்தில் இது விஷயமாக எழுதப்பட்டிருப்பதை வித்வான்கள் வாசித்திருக்கலாம். அது எப்படியிருந்தாலும் இந்த விஷயத்தை முதலில் கிளப்பின சேட்லூர் ஸ்வாமி என் மௌனமாயிருக்கின்றார்? திருக்கோட்டியூர் ஸ்ரீராமதேசிகர் எழுதியிருக்கிறாரே, அது போராதோ? என்பர்கள். இவருடைய பிராமாணிகத்வத்தையும் இங்கே சிறிது காட்டுகிறேன் பாருங்கள். அண்ணங்கராசார் தம்முடைய தத்வக்ரந்தத்தை "ஜேஜேது ஸம்ஸ்தாபிதம்" என்று முடித்திருக்கிறார். இதில் ஸம்ஸ்தாபிதமென்பதற்குக் 'கொல்லப்பட்டதென்று அர்த்தம்' என்று இந்த மஹான் எழுதுகிறார். பகவான் தான் அவதரிப்பது தர்மஸம்ஸ்தாபநார்த்தாய என்கிறான். தர்மத்தைக் கொல்வதற்காகவே எம்பெருமானவதரிக்கிறான் என்றன்றோ இந்த மஹான் வியாக்கியானமெழுதவேண்டும். இவரெழுதாமற் போனாலும் பிறனொருவன் இப்படி எழுதினால் அதை நிரஸிக்க இவர்க்கு முகமில்லை யன்றோ. இப்படி மனம் போகிற போக்காகவே எதையாவது நிரப்பி க்ரந்தமெழுதிவிட்டால் இதெல்லாமா தேசிகஸூக்தி ஸம்ரக்ஷணமாய்விடும்? ராயம்பெட்டையவரின் முகவுரையைப் பெற்று வெளிவருகிற க்ரந்தத்தின் பரிசு இத்தகையதாயிருத்தல் வியப்பன்றே.

## 5. சேட்லூர் தாண்டவ கண்டனம்.

இதன் பெருமை விச்வப்ரஸித்தம். இதில் 52 விஷயங்களைக் கண்ணாடிபோல் எடுத்து ப்ரமாண புஷ்கலமாக நிரூபித்துக் காட்டி ஒவ்வொன்றிலும் சேட்லூர் ஸ்வாமி வாய்திறக்க வழியில்லாவகை காட்டப்பட்டிருக்கின்றது. அந்த 52ல் மிகவும் முக்கியமாகச் சிலவற்றை நான் எடுத்துக் கேட்கிறேன். 1. "பரிக்ருஹீத பௌண்ட்

ரகாத்வைதாநாம் அமீஷாம்" என்கிற ஸங்கல்பஸூர்யோதய ஸூக்திக்கு சேட்லூரார் எழுதியிருக்கிற அர்த்தம் அவ்யுத்பந்நசிகாமணித்வத்தைக் காட்டுகின்றதென்கிற விஷயம் வாஸ்தவமானதல்லவா? இதைப்பற்றி மாயமயக்கத்திலும் 9, 10, 11, 12 பக்கங்களில் அலசியலசி எழுதப்பட்டிருக்கின்றது. இதற்கு பதில் சொல்லாவிடில் இவர் வஹிக்கிற உபாதிகள் பைஸா பொருமா? 'இந்த ஒரு விஷயத்தில் இவர் பிடித்தபிடி ஸாதித்துவிடுவாராகில் அன்றே தாஸாநுதாஸனாக நிற்கக்கடவேன். இது ஸத்யம். பின் வாங்காமல் பேசவருவரா?" என்று மாயமயக்கத்தில் எழுதியிருந்தும் பின்வாங்கி நிற்குமிவர் என்றைக்கு முன்வருவர்? இவையெல்லாம லேசான விஷயங்களா? அதை விட்டு வேறு விஷயம் ஏன்?

2. "அஹிச்சத்ர ப்ராஹ்மணீ ஸுராபாநாதிவத்" என்கிற ஸச்சரித்ரரக்ஷா ஸூக்திக்கு சேட்லூரார் எழுதின அர்த்தம் மிகவும் ஆபாஸமானது. அண்ணங்காசாரியர், பூர்வமீமாம்ஸா சாபரபாஷ்ய டீகையான தந்த்ர வார்த்திகத்தில் முதலத்யாயம் மூன்றும் பாதம் மூன்றுமதிகரணத்தில் (புண எடிஷன் பக்கம் 204, 210ல்) உள்ள வாக்கியங்களை யெடுத்துக்காட்டி ஸ்வாமி தேசிகன் திருவுள்ளம் பற்றின அர்த்தத்தை சாஸ்த்ரஜ்ஞர்கள் சிரமேற் கொள்ளும்படியாக உபபாதித்திருக்கிறரென்பது தாண்டவ கண்டன மண்டனத்தில் (பக்கம் 14ல்) ஸ்பஷ்டம். "ஒன்றையும் பாராமல் ஒருவரையும் கேளாமல் க்ரந்த ஸந்தர்ப்பத்தையும் கவனியாமல் ஸமாஸப்ரக்ரியையிலும் மதி செலுத்தாமல் 'நாக்கொடைபை ஸாப்பிடுவது' என்று சேட்லூரார் அர்த்த மெழுதிவிட்டு நானே தேசிகதர்சன துரந்தரனென்றால் தெய்வம் ஸஹிக்குமோ?" என்றும் அங்கு உள்ளது. அவற்றையெல்லாம் பார்த்தேயிருக்கிற ராயம்பெட்டை ஒரு சாஸ்த்ரத்திலும் அவகாஹநமில்லாமை விளங்க நிற்கின்ற விவரைக்குறித்து முகவுரையில் இவர் பல சாஸ்திரங்களைக் கசடறக் கற்றவரென்று வரைந்தால் இத்றகு விபரீதலக்ஷணை தவிர வேறு வழியுண்டோ? உண்டானல் ராயம்பெட்டரே நிரூபிக்கட்டும்.

3. "ஸமஸ்யாஸஹஸ்ரீ கவிகதகம்ருகேந்த்ர:" என்ற ஸ்தோத்ர பாஷ்யாவஸாந ஸூக்தியில் சேட்லூரார் பதவிபாக வழியுமறியாமல்

விபரீதமாக வுரைத்திருக்கிறரென்றும் இவர்க்கு வியாகரண வாஸனையே இல்லையென்றும் நிரூபித்திருப்பதற்கு, வியாகரணத்தில் பெரும்பூஜ்யரான முகவுரைகாரர்தாம் விடை பிறுக்கட்டுமே.

4. அனேக அருளிச்செயல்களின் மூலபாடத்தையும் அபத்தமாக எழுதி அர்த்தத்தையும் அஸம்பத்தமாகச் சேட்லூரர் எழுதியிருக்கிறரென்று விவரித்திருக்கின்ற பாகங்களுக்கு ஈஷத்தேனும் உத்தரமுண்டோ? "நின்றாடு கண் மயில் போல்" என்ற ஒரு விஷயத்தைமாத்திரம் எடுத்துக் கொண்டாலும் போதுமே போது போக்க. ஸ்ரீ வைஷ்ணவக்ரந்தங்களில் இவரது அவகாஹநம் இவ்வண்ணமிருக்க, இப்படிப்பட்டவரை நோக்கி முகவுரைகாரர் "விசிஷ்ய வைஷ்ணவர்க்கு உறிய்? உபய வேதாந்தங்களையும் ஸதாசார்ய கடாக்ஷமஹிமையால் கசடறக் கற்றவர்" என்றெழுதிவிட்டது இவர்படுகிற பரிபவத்தில் இவரது ஆசாரியரையும் தாயாதியாக்க நினைவிஞலே போலும். இப்படிப்பட்ட விஷயங்கள் பலவும் சேட்லூர் தாண்டவ கண்டனத்தில் வித்வான்கள் வியக்கத் தக்கவையே. 'தூப்புல்" என்பது தலத்தின் பெயரல்ல என்பது முதலான (சேட்லூரரின்) துர்வாதங்கள் அநுவதிக்கவும் தகாதவை யென்று உபேக்ஷிக்கப்படுகின்றன.

## 6. சேட்லூரர் நூலாராய்ச்சி.

இப்புத்தகம்12பக்கமே கொண்டதாயினும் அத்தனையும் முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னுமாகவன்றே உள்ளது. பெரியவாச்சான் பிள்ளையை தூஷிக்கப் பிறந்த நம் சேட்லூர் ஸ்வாமி "திகசுசிமவிநீதம்" என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியில் தேசிகன் ஆதரித்த 'நிர்ப்பயம்' என்ற பாடத்தை விட்டு 'நிர்த்தயம்' என்று பெரியவாச்சான்பிள்ளை கொண்ட பாடத்தையே அடிக்கடி ஆதரிக்கக் காரண மென்ன? என்று 2 பக்கம் விசாரம் செய்திருக்கிறது. தேசிக தர்சநாசார்ய ரென்ற பெயர் சுமப்பவர் இதற்கு அவசியம் பதில் எழுதித் தீரவேண்டு மல்லவா? அண்ணங்கராசாருடைய ஸ்தோத்ரரத்ந வியாக்கியானத்தைக் கண்டு அஞ்சி நடுங்கி இவர் தேசிக பாஷ்யத்தை உபேக்ஷித்ததாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றதல்லவா? என் இதற்கு மறுப்புரைக்காமலிருக்கிறார்?

சிறு விஷயமென்று இதை விட்டாலும் விடுவோம்; மிகப் பெரியதொரு விஷயத்தில் இந்த சேட்லூர் ஸ்வாமி அண்ணங்கரா சாரியரை ஆசாரியராகத் தலையில் வைத்துக் கொண்டாடி யிருக்கிறரே, இது என்ன அநியாயம்!.

"இவர் ஸங்கல்ப ஸூர்யோதய மொழி பெயர்பபு அச்சிட்டபோது அதில் முகவரையில் (பக்கம் 2லும் 7லும்) ப்ரபோத சந்த்ரோதய கர்த்தா வான க்ருஷ்ணமிச்ரனுக்கும் தேசிகனுக்கும் நேரில் வாதப்போர் நடந்த தாக எழுதியிருந்தார். அதைக் கண்டித்து அண்ணங்கராசாரியர் பாதுகா ஸஹஸ்ராவதார தத்துவத்தில் தேசிகனுக்கும் அந்த க்ருஷ்ணமிச்ரனுக்கும் மிகவும் காலபேத மிருப்பதாக சாஸநம் முதலான ஸாக்ஷியங்களைக்கொண்டு நிரூபித்துவிட்டா ரென்று கண்டவிவர் அதை சிரஸா வஹித்து அந்த ஐதிஹ் யம் தப்புதான் என்று இப்போது தாமே (தேசிக வைபவப் பதிப்பில்) பிரசு ரம் செய்துவிட்டார். எதுக்கு இப்படியெல்லாமிவர் அண்ணங்கராசா ருடைய வாக்குக்களையே நிதியாகக் கொள்ள வேண்டும். இவருக்கு பதில் சொல்லத் தெரியாவிட்டால் அதில் வழவழவென்று போய்விடக் கூடாதா? வாய் மூடியாவது கிடக்கலாகாதா? அண்ணங்கராசாரியர் பெரிய ஆராய்ச் சிக்காரராகவும் அவர் நிர்ணயிப்பதே ஸரி என்பதாகவும் இவர் எழுதிவிட்டு தேசிக தர்சநாசாரியர் என்றும் தம்மைப் பிரசுரம் செய்து கொள்ளுகிற வெட்கக்கேடு உண்மையான தேசிக தர்சனஸ்தர்களுக்கு எவ்வளவு பரிதாப மாயிருக்குமென்பதை விவேகிகளே அறிவார்கள்"
என்று எழுதியுள்ள பகுதிக்கு அவசியம் விடையளிக்க வேண்டு மிவர். இப்படிகூட குடி கெடுப்பாருண்டோ?

திருமடல் விஷயத்தில் அண்ணங்கராசாரியரைத் தாக்க நினைத்து அஸம்பத்தமாக ஒன்றிரண்டு வரிகளை யெழுதிவைத்த சேட் லூர்ஸ்வாமி இந்த 'நூலாராய்ச்சி'யில் விஸ்தாரமாகவும் வெகு அழ காகவும் தூக்கி எறியப்பட்டிருக்கிறர். இதற்கெல்லாம் பதில் அநா வச்யகமென்று இவர் நினைவுபோலும். நமஸ்கார தத்வத்திற்குத் தானு இப்போது பதில் வெகு ஆவச்யகம்? புத்தங்கோட்டம்ஸ்வாமி ப்ரணம ப்ரகாசத்தில் எழுதியுள்ள விஷயங்களைவிட இவர் என்ன அதிக விஷயம் விளக்கிவிட்டாரோ தெரியவில்லை. நமஸ்கார தத்வத் தில்—பாஷ்யகாரருடைய நித்ய க்ரந்தத்திலுள்ள "தண்டவத் ப்ர ணம்ய உத்தாய ஸ்வாகதம் நிவேத்ய" என்கிற வாக்யத்தை அண்

ணங்கராசார் எடுத்துக்காட்டி ப்ரஸங்கம் செய்திருக்கிறார். அப்படிப்பட்ட முக்கியமான விஷயங்களை அடியோடு தொடாமலும் உள்ள வாக்கியங்களை பரக்ஷிப்தம் கல்பிதம் என்று எழுதியும் ஏடுகளை நிரப்புகின்ற இவர்கள் செய்கிற தேசிகஸூக்தி ஸம்ரக்ஷணத்தை உண்மைப் பண்டிதர்களில் ஒருவரான (அல்லது, முதல்வரான, அத்விதீயரான் ஸ்ரீமத். ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமியும் வாஸ்தவமாக மெச்சுகின்றாரா? என்பதற்கு மாத்திரம் த்ருப்திகரமான பதில் வெளிவந்துவிட்டால் போதும். வெளிவருமா? என்றைக்கு?

## 7. சேட்லூரர் மாயமயக்கம்.

சேட்லூர் ஸ்வாமியின் யோக்யதைகளைப் பற்றி அண்ணங்கராசாரியர் வெளியிட்டிருக்கின்ற நூல்களில் இதுதான் கடைசியானதென்று நினைக்கிறேன். இதில்தான் சேட்லூர் ஸ்வாமியின் மன்னிப்புக் கடிதம் பிரசுரமுற்றிருக்கின்றது. "இதிலுள்ள 24 பக்கமும் 24 பலாப்பழங் காணும்" என்று ஸ்ரீமத் கோபாலம் ஸ்வாமியும் ஸாதிக்கும்படியா யிருந்தது. சேட்லூர் ஸ்வாமிக்கு திவ்ய ப்ரபந்தத்திலுங்கூடப் பரிசய லேசமுமில்லை யென்பது இதில் ஸ்திரீகரிக்கப்பட்டிருக்கிறது. சில முதலியார்களையே சேட்லூர்ஸ்வாமி பூர்வாசாரியராக வரித்திருக்கின்றா ரென்பதும் இதில் (பக்கம் 19ல்) ஸஸாக்ஷிகமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. இதில் அண்ணங்கராசாரியர் முடிவாக எழுதியிருக்கின்ற நாலு வரிகளை மாத்திரம் பாருங்கள்:—

"மேற்குறித்த ஐந்து விஷயங்களுக்கும் (சேட்லூர் ஸ்வாமி) ஸஹ்ருதய ஹ்ருதயங்கமமான ஸமாதானம் வெளியிடுவாராயின் அதற்குப் பரிசாக நாம் இவரிடத்தில் பஞ்ச ஸம்ஸ்காரம் பெறுவோம். இவ்விதமாக அடியேனை அடிமைப்படுத்திக் கொள்ள இவர்க்கு எளிதான உபாயத்தைக் காட்டியிருந்தும் இவர் இழப்பாராயின் சோகிக்க வேண்டியதேயாம். எதற்கு? இவருடைய ஸத்தைக்கு. இங்ஙனம்:—காஞ்சீ. அண்ணங்கராசாரியர்."

என்று உள்ளது. சேட்லூர்ஸ்வாமியிடம் தாம் ஸமாச்ரயணம் செய்து கொள்ள வருவதாகவும் அப்படி வருமாறு செய்ய எளிதான உபாயம் காட்டியிருப்பதாகவும் கூசாமல் எழுதியிருக்கின்ற அண்ணங்கராசாரியரை இவர் விட்டிருப்பதற்கு என்ன காரணம்? இவராக

வே காஞ்சீபுரம் சென்று அவரை வலியப் பிடித்திழுத்து வாதம் நடத்தி மத்யஸ்தர்கள் முன்னிலையில் அவருடைய கேள்விகளுக்கு ஸமாதானங்களும் அழகாக அருளிச் செய்து அவருடைய தோள்களில் திருவிலச்சினை சாத்தித் திரும்பியிருக்க வேண்டாமா? அங்ஙனம் செய்திருந்தால் அவருடைய நமஸ்கார தத்வத்திற்கு அவருடைய கையைக் கொண்டே அற்புதமான கண்டனம் வெளியிடுவிக்கவும் ப்ராப்த மாகுமே. ருஜுவான வழியைவிட்டு வீண்க்லேசங்கள் ஏதுக்குப் படுகிறார்கள்? இதையே முக்கியமாக கவனிக்க.

## 8. சேட்லூர் தாண்டவ கண்டன மண்டனம்.

சேட்லூர் ஸ்வாமியின் யோக்யதைகளைப் பன்னிப் பன்னியுரைத்து அண்ணங்கராசார் சீடர்கள் வெளியிட்டுள்ள புத்தகங்களில் இது கடைசி—என்று தெரிகிறது. இதனை ஆராய்ந்தால், சேட்லூர்ஸ்வாமி நேருக்கு நேராகநின்று ஸமஞ்ஜஸமான ஸமாதானங்களை சாஸ்த்ரபத்ததியாகத் தெரிவியாமல் மறைமுகமாயிருந்து வியர்த்த விஷயங்களையே கிளப்புகின்றாரென்பதும் அதிலும் பங்கமே பலிக்கின்றதென்பதும் வெட்ட வெளிச்சமாகிறது. ஆக இப்படிப்பட்ட எட்டு புஸ்தகங்களுள் ஏதாவது ஒரு புஸ்தகத்தையாவது ஒரு விஷயத்தையாவது பற்றிக்கொண்டு தம்முடைய சாஸ்திர ஞானமும் உபய வேதாந்த வைதுஷ்யமும் உபய பாஷா ப்ராவீண்யமும் ஸதாசார்ய ஸேவா ஸாம்ராஜ்யமும் நன்கு விளங்கும்படி அழகாக ஒரு க்ரந்தமெழுதி அண்ணங்கராசாரியை அத:பாதாளத்திலே தள்ளிவிட்டு நம்முடைய சேட்லூர்ஸ்வாமி கம்பீரமாக உலாவமாட்டாரா? அப்படி என்றைக்கு உலாவுவர்? என்று எத்தனை பேர்கள் எத்தனை வருஷமாக எதிர் பார்த்திருக்கிறார்கள் தெரியுமோ? அப்படி உலாவ என்றைக்கு நேரும்?

## இனி ராயம்பெட்டை பாணரின் மஹா பாண்டித்ய மாஹாத்மியம் கூறுவோம்.

இந்த ஸ்வாமியின் மாஹாத்மியம் ரஸிகபுதாஞ்சநம், உபதேசரஸாயநஸாரம், மந்த்ரமஹோததியின் முதல்தரங்கம் ஆகிய மூன்று புஸ்தகங்களில் விரிவாகவே வெளிவந்துள்ளது. மேலே நாமும் வெளி

பிட்டிருக்கிறோம். இந்த ஸ்வாமியின் பாஷைகள், வெகு ஆச்சரிய மாயிருக்கும். முஸாண்டர்கள், அஷ்டாளங்கள், அண்ணாங்கள், அக்காளிப்பிச்சங்கள் என்றிப்படிப்பட்ட பள்ளிப்பிச்சான் பேச்சுக் களில் இவர் மஹாமஹா உபாதியாயரென்பது இவரது மர்மப்ரகாச நூலினால் ஸ்பஷ்டமே. "கோ வித்வாந்? பரதாரவித்தஹரணே ஸர்வேபி வித்வத்தமா:" என்கிற கணக்கிலே பாண்டித்யம் உலகில் பலவகைப்பட்டிருக்கு மல்லவா? ஒவ்வொரு பாண்டித்யத்திற்கும் அரசாங்கத்தார் பரிசளிக்கக் கடமைப் பட்டவர்கள்தானே. உலக மெலாமோதும் புகழ்பெற்ற கபிஸ்தலம்ஸ்வாமி லக்ஷ்மீபுரம் ஸ்வாமி போல்வாருடைய க்ரந்தங்களில் இவருடைய பாஷைகள் சிறிதாவது காணக்கிடைக்குமா பாருங்கள். அவர்களைவிட இவர் மஹா வியா பகரென்பது இதனாலேயே விசதமாகும். பேச்சு வருங்கால் சிகம் பர தீக்ஷிதாள் "பைஸா நாஸ்தி, தடபுடல் ஜாஸ்தி" என்று சொல்லிச் சொல்லிச் சிரிப்பது வழக்கம். கும்ப × மந்த்ர மஹோததியில் 29 பக்கம் முதல் இவருடைய பெருமைகள் அப் பொழுதைக் கப்பொழுதென் ஊராவமுதம். அப் புத்தகத்தின் முடிவில்

"(அண்ணங்கராசாரியருடைய) பரமார்த்த பரித்ராண ஸஞ்சிகையின் மேல் விஷயமுண்டானால் வெளியிடுவது. இல்லையாகில் ஸாத்விகராய் அடங்கி யொடுங்கி நிற்பது. இவ்விரண்டையும் விட்டு வம்புதும்புச் சுவடி களை இவர்கள் வீணே கிளப்பிக் கொண்டிருப்பது தங்களுக்கு நேர்ந்த வேத விசாரத் தோல்வியை ஒருபடி மறக்கச் செய்வதற்கோ மறையச் செய்வதற் கோ உறுப்பாகு மென்று இவர்கள் நினைத்துவிட்டாலும் அது உலகுக்கெல் லாம் விளங்காமற் போகாது. திருக்குடந்தையர்கள் தொட்ட விஷயம் என்ன? அது எங்கே நின்றிருக்கிறது? கடைசியாக பதில் சொல்ல வேண் டிய முடை யார் தலையில் இழிந்திருக்கிறது? என்பதையே விவேகிகள் கணி சித்து நிற்பார்கள். இனி இவர்கள் பிராமாணிகர்களா யிருந்து அந்த வேத விசரத்தில், மேல் கோடி எற்ற முன்வருவார்களாகில் நன்று; அதை விட்டுக் கீழ் வெட்டான சுவடிகளை எத்தனை வெளியிட்டாலும் அதிலும் இவர்களு டைய இளிம்புகளே மேன்மேலும் வெளிவரற்பாலனவாம் என்பது நன்கு ஞாபக மிருக்கத்தக்கது."

என்று ஸிம்ஹநாதமாய் கர்ஜிக்கப்பட்டிருந்ததைக் கண்ட அக்நிஹோத்ரிகளோடு கூடவே இவரும் இருபத்தெட்டு மாதங்களாய் மங்கிக்கிடந்து இப்போது முகவுரை யெழுதும் வியாஜமாக முடிதூக்க வருகிறார். இவர் அண்ணங்கராசாரியரோடு போராடப் புகுந்தது மிகவும் அப்ரஸக்தமென்றும் வேதலக்ஷண விவாதிகளாய்ப் பராஜிதர்களான அக்நிஹோத்ரிகளின் கண்ணைத் துடைப்பதற்காகவே இவர் ஊடே கிளம்பினரென்றும், அவர்களின் கதியே இவர்க்கு மாயிற்றென்றும் உள்ளது உள்ளபடியே பரக்க நிரூபிக்கப்பட்டிருக்கிறது ஆனால் இப்படி நாம் எழுதுவதைக் கண்டவுடனே இவர் மறுபடியும் முஸுண்டர்களித்யாதி ஸ்வபாஷைகளைப் பொழிந்து கொண்டு, விட்டேனு பாருங்களென்று வாய்வீசவருவர் எதற்கும் அஞ்சி யொளிப்பாராருமில்லை. தாராளமாகவும் ஏராளமாகவும் கர்ஜிக்கட்டும், எழுதட்டும். அழகான ஸத்விஷயங்களை அமைத்தல்லவோ அறிஞர்களை ஆநந்திப்பிக்கவேண்டும். இப்போது சேட்லூரர் நூலுக்கு அநுபல்லவியாக இவர் நான்கு பக்கம் எழுதினரே; இதில், பரதூஷணங்களை ப்ரஸங்கியாமல் கபிஸ்தலம் ஸ்வாமி போல்வார் எழுதுகிறவழியிலே நமது ஸித்தாந்தமான நமஸ்காராவ்ருத்தி ப்ராமாண்யவிஷயமாக நாலுவரியாவது எழுதியிருந்தாலும் எவ்வளவு போக்யமாயிருக்கும். இவரால் நம்முடைய தேசிக ஸம்ப்ரதாயத்திற்கு உபகார லவலேசமாகிலும் உண்டோ? காலேஜுகளில் பெரிய பதவிகளை அலங்கரிக்கின்ற மஹான்கள் எத்தனைபேர்கள் எத்தனைக்ரந்தங்கள் எழுதியிருக்கவில்லை? அவர்களுக்கு எவ்வளவு கம்பீரமான நடை! எவ்வளவு சாஸ்த்ர ஆராய்ச்சி! எவ்வளவு சொல் நயம்! எவ்வளவு பாப பீருத்வம்!—அந்தோ! என்ன இவரது இழிவுரை நிரை நிரை! என்ன வீண்வாய்ப் பதற்றம்!!

அண்ணங்கராசார்மேல் இவர் வெளியிட்டிருந்த துண்டு பத்ரிகைக்கு பதிலாக அவர் வெளியிட்டிருக்கிற ரஸிகபுதாஞ்ஜனத்தை எடுத்துப் பாருங்கள். என்ன மதுரவாணி! என்ன கம்பீரஸம்ஸ்க்ருத நடை! ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியையும் பரவசமாக ஈடுபடுத்தின மஹாக்ரந்தமன்றோ அது. அதற்கு பதில் எழுதுகிறவிவர் அவரைப்போலவே ஸம்ஸ்க்ருதத்திலன்றோ பதிலெழுதவேண்டும் ஸம்ஸ்க்ருதத்திலெழுதினால் 'அஷட்டாளங்கள், அண்ணாளங்கள்'

இத்யாதியாகத் தாம் கற்ற பாடைகளைப் பிரயோகிக்க அவகாசம் கிடைக்காதே!' என்றுதானே க்ராம்யோக்திகளை நிரப்பித் தமிழில் எழுதினர். அதிலாவது ஒரு நிலைநின்று ஸமீஹிதஸித்தி பெற்ருரோ! அண்ணங்கராசாருடைய க்ரந்தங்களில் வியாகரணப் பிசகான அபசப்தங்களை யெடுத்துக் காட்டினரிவர். ஒன்றுக்குக்கூட சப்பையான ஸ்மாதானமும் அவரால் எழுதவே முடியாதென்றும் தாமே எழுதிக்கொண்டார். உடனே அவர் ஸமாதானங்களை யெழுதி இவருடைய ஆசாரியரான ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் அபிநந்தன ஸ்ரீ முகத்தோடும் வெளியிட்டார். இவர் எந்த அம்சத்தில் வெற்றிபெற்ருர். அவருடைய அபசப்தங்களில் முதன்மையான அபசப்தம் 'ஸ்வீய' என்கிற பதம்—என்று இவர் கிளப்பினர். அதற்கு அவர் லக்ஷ்யலக்ஷணங்களைக் கொண்டு நிரூபித்த பின்பு இவர் தாமே மர்மப்ரகாசத்தில் 'இது அசுத்தமென்பது நம் எண்ணமல்ல' என்று பின்வாங்கினர்.

தவிரவும், அண்ணங்கராசாரியருக்கு சப்தங்கள் மாத்திரம் தெரியுமே யன்றி ப்ரயோகஸ்தலம் தெரியாதென்று இவர் லேசாக எழுதியிருந்ததற்கு அவர் என்ன பதில் எழுதியிருக்கிருர் கவனித்தீர்களா? (ஸாரம்-பக்கம் 14, 15, பாருங்கள்.) சாஸ்த்ரீயமான பதிலை எழுதிவிட்டு, "முன்பின் ஆலோசனையின்றி துராக்ரஹமே தூண்டநின்று எதையேனும் ஸஹஸா எழுதிவைத்துக் கள்ளவிழி விழித்து நிற்பது இந்த ராயம்பெட்டர் தமக்கே ஏற்ற செல்வம்" என்று அவர் முடித்திருக்கின்ருரே. அந்த விழிதானே இவர் விழித்து நிற்கிருர். இல்லையென்ருல் அந்த ஒரு விஷயத்தில் இனியாவது நல்விழி விழிக்கட்டுமே. அவரது ஸம்பிரதாயத்தில் அபராதமும் பகவதுபஹார மென்று இவர் பரிஹஸித் தெழுதியிருந்ததற்கு அவர் தக்க வாய்மூடி போட்டு நெருக்கியிருக்கிருரே, அதன் மேல்தான் வாய்திறக்க வழியுண்டோ? அந்தோ! என்ன பரிபவம்!

'ஊத்வம் அசுத்தம்' என்கிற ஒரு விஷயத்தில் இவருடைய சூதை நன்கு எடுத்துக்காட்டி, சில்லரை விஷயங்கள் தவிர வேறு இவர்க்குத் தெரியாதென்று (பக்கம் 17ல்) பரக்க நிரூபித்திருக்கிருரே, அதற்குத்தான் இந்த ஜன்மத்தில் பதிலுண்டோ?

'பரிபாகேந' என்கிற (அண்ணங்கராசாருடைய) ப்ரயோகத்தை தூஷிக்கப் புகுந்து தேசிகனேயும் அவரது ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரத்தைப் பதிப்பித்த மஹான்களேயும் இந்த ராயம்பெட்டர் (மர்ம ப்ரகாசம் பக்கம் 88ல்) தூஷித்துவிட்டாரே; இவரா தேசிக ஸூக்தி ஸம்ரக்ஷணை ஸபைக்கு அங்கத்தினராயிருக்க உரியவர்? இந்த விஷயத்தை மாத்திரமாவது உண்மையான வித்வான்கள் விமர்சிப்பார்களா? [இதன் விவரணம் உபதேச ரஸாயநஸாரம் பக்கம் 9, 10 களில் காண்க.]

ஸம்விததே விசாரத்தில் வியாகரண விஷயமாக அண்ணங்கராசார் ரஸிகபுதராஞ்சநத்தில் எழுதியிருந்தது இவருடைய புத்திக்குச் சிறிதும் எட்டவில்லை யென்றும், நுனிப்புல் மேய்ந்து பரிபவப்பட்டு விட்டாரென்றும், சரக்கில்லாத செருக்கு ஏதுக்கு? என்றும் (11, 12, 13 பக்கங்களில்) வெகு விரிவாக எழுதியிருக்கிறாரே, அதற்குத் தான் விடையிறுக்க விதியுண்டோ இப்பிறப்பில்? 'அவர் விஷயப் பிச்சை வாங்குகிறவர்' என்கிற இந்த ஒரு வார்த்தைதான் இவர் திருப்பித்திருப்பி யெழுதக் கற்றது. விஷயாந்தரப் பிச்சையில் கை தேர்ந்த இவரைக் காட்டிலும் விஷயப் பிச்சையில் வீறு பெற்றவர் விவேகிகளுக்கு உத்தேச்யரே. இவருடைய வாதம் ஒன்றுகூட ஓங்கவொட்டாமல் இவரை அவர் அதః பாதாளத்தில் தள்ளிவிடவே வேறு என்ன எழுதுவர் பாவம்! இவரும் விஷயப் பிச்சை வாங்கி அவருடைய கேள்விகட்கு விடை யளிக்கட்டுமே. அதற்கு இந்த ஜன்மத்தில் பாக்யம் பெறாதவிவர் நிந்தனைகளைப் பொழிந்தே காலம் கழிக்க வேண்டியவரென்பதில் என்ன ஸந்தேஹம்?

இவருடைய அஜ்ஞாந அந்யதாஜ்ஞானங்களை நன்கு விவரித்து அண்ணங்கராசார் என்னென்ன சோத்யங்கள் இவரது உக்திகளில் செய்திருக்கிறாரோ அவற்றையெல்லாம் முன்னம் நிந்தாலேசமுமில்லாமல் சாஸ்த்ரீய மார்க்கமாகக் கண்டித்து முடித்துவிட்டு, பிறகு அவரை இவர் மஹா பாரதத்திற்கும் மேலாகச் சுமைசுமையாய் தூஷிக்கட்டும். அது எல்லார்க்கும் பரம போக்யமே யாகும். விஷய விசாரத்தில் ஊமையாயிருந்துவிட்டு, அஜ்ஞர் பிரமிக்கக்கூடிய பிருதாவளிகளைக் கொண்டே வெற்றி பெற்றுவிட வேண்டுமென்று மனப்பால் குடிக்கது வெறும் நிந்தனைகளையே எழுதிக் கொண்டிருந்தால் இது என்ன பண்டித ராஜ்யம்?

யதிராஜ ஸப்ததியில் "மூலே நிவிச்ய" என்றவிடத்தில் இந்த ராயம்பெட்டர் 'நிவேச்ய' என்று தவறாகப் பதிப்பித்தார். இதை அண்ணங்கராசார் எடுத்துக்காட்டிச் சொற்சரமாரி பொழிந்திருக்கிறார். தவறுதலைத் தவறுதலாகவே ஒப்புக்கொண்டு தலை வணங்கு

வது பண்டித லக்ஷணமே யன்றோ? 'நிவேச்ய' என்றால் அர்த்தமே பொருந்தாதென்று அவர் காட்டியிருக்கிறார். அதற்கு இவர் என்ன உத்தரம் சொன்னாரென்று பாருங்கள் தாம் ஏதோவொரு அர்த்த ஸ்வாரஸ்யத்தை நினைத்ததாக எழுதிவிட்டார். அது என்ன? என்றால் மௌனந்தவிர வேறில்லை இத்தகைய வஞ்சனைகளுக்கு யார் மயங்குவார்? உபதேச ரஸாயநஸாரம் பக்கம் 18, 19ல் இவ் விஷய விரிவைக்கண்டு ஏற்கனவே பண்டிதவுலகம் விலவறச் சிரித்தாயிற்று. இன்னமும் சிரிக்க விரைவில் நேருமா?

அண்ணங்கராசாருடைய 'விவாஹயதி' என்ற ப்ரயோகத்தை இவர் தூஷித்துவிட (ரஸாயநஸாரம் பக்கம் 20ல்) அதுவிஷயமாக எப்படிப்பட்ட ஆராய்ச்சி காட்டப்பட்டிருக்கின்றது பார்த்தீர்களா? விஷயத்திற்கு விஷயம் அப்படியன்றோ சாஸ்த்ரஜ்ஞர்கள் தலை துலுக்கும்படி நிரூபிக்க வேண்டும். அப்படி இவர் ஒரு விஷயமாவது நிரூபித்ததுண்டோ? அண்ணங்கராசாருடைய பிரயோகங்களில் 'ஸாஹாய்யகம்' என்பது பெரும்பிசகு என்றும் இதற்கு ஸமாதானம் சொல்லவே முடியாதென்றும் ராயம்பெட்டர் எழுதினார். மறுநாளே அதற்கு ஸமாதானம் வெளிவந்தது. சிதம்பரத்தில் மஹாமஹோபாத்யாயராக விளங்கும் ப்ரஹ்மஸ்ரீ. தண்டபாணி தீக்ஷிதரவாள் துந்துபி வருஷத்தில் வெளியிட்டுள்ள 'சிதம்பர தத்வ நிர்ணய' மென்னும் புஸ்தகத்தின் முகப்பில் அந்த மஹா பண்டிதோத்தமரும் 'ஸாஹாய்யகே' என்று எழுதி வெளியிட்டிருக்கிறார். கூபகூர்மமாய் ஒன்றையும் பாராமல் வீண் அட்டஹாஸஞ் செய்து பரிபவப்படுவதோ பண்டிதராஜ லக்ஷணம்? அந்தோ! என்னே!!

ராயம்பெட்டர் ஸ்ரீராமாயண தனிச்லோகப் பதிப்பில் * நகோத்தமம் புஷ்பிதமாஸஸாத * என்ற விடத்தில் நகோத்தம பதத்திற்குப் பர்வதமென்று தப்பர்த்தம் எழுதிவிட்டு, இதை அண்ணங்கராசார் எடுத்துக் காட்டி ஏசின பின்பு பதில் சொல்ல முடியாமல் 'இது ஏற்கனவே தப்பென்று நிர்ணயிக்கப்பட்ட விஷயந்தானே' என்று அவர் எழுதியிருந்ததைப் பார்க்கும் போது, இப்படியும் ஒரு ஆள் உலாவுகின்றபடி என்னே! என்று தான் வியக்கவேண்டியிருக்கின்றது. (ஸாரம் பக்கம் 22ல்) இது ஸம்பந்தமான விநோதங்களைக் காணலாம். இந்த விஷயங்களெல்லாம் ஒருபுறமிருக்க, உபதேச ரஸாயநஸாரம் பக்கம் 26ல் முதல் பாராவில் எழுதியுள்ள விஷயம் பண்டித கோஷ்டிகளில் பலகாலும் ஞாபகத்திற்கு வந்து வயிறு வெடிக்கச் சிரிப்பதற்கு உறுப்பாயிருப்பதாகும். இந்த ராயம்பெட்டர் 1908 ஆம் வருஷத்தில் பதிப்பித்த ஸாஹித்ய ரத்ந மஞ்ஜூஷையில் குரோரப்யவலிப்தஸ்ய என்கிற ஸ்ரீராமாயண அயோத்யா காண்ட (21-14) ச்லோகமானது பிரபோதசந்த்ரோதய

நாடகத்தின் முதல் அங்கத்தின் இருபத்திரண்டாம் ச்லோகமாகக் குறிக்கப்பட்டிருப்பதை அண்ணங்கராசார் சில ஸாஹித்ரஸிகர்களிடத்தில் எடுத்துக் காட்டினதாகவும், அவர்கள் கைதட்டிச் சிரித்ததாகவும், அடட! **R. V.** வீண் அட்டஹாஸன்டோய்! என்றும் 'நுனிப்புல் மேய்கிறவராக்கம் பாவம்!' என்றும் ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டதாகவும் எழுதப்பட்டிருக்கின்றதல்லவா? ஈதொன்று போரார்தா இவர்க்கு. இனி வெந்நரகமுஞ் சேரவேணுமோ?

ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களிலேயே இவருடைய சாயம் இங்ஙனமிருக்க, தமிழ் நூல்களில் கேட்கவே வேண்டா. தமிழ் நாற்றமுமறியாதவிவர் எதுக்கு அதில் கைவைத்துப் பரிபவப்படவேண்டும்? அத்தகைய அஸப்யங்களில் இங்கு ஒன்றே காட்டுகின்றேன்; ப்ரக்ருத ப்ராஞ்மகிஷ்கர்ஷ முகவுரையில் இவர் 'முயற்சிப்பது' என்று பிரயோகித்திருக்கிறார். அண்ணங்கராசாருடைய சீடர் வெளியிட்ட தாண்டவகண்டன மண்டனத்தில் (பக்கம் 18ல்) இப்பத விஷயமாக இலக்கணவிளக்குக் காட்டியிருந்துங் கூட இவர்க்கு இருள் நீங்கவில்லையே. 'முயல்வது' என்றன்றி வேறுவகையாக ஸித்திக்க வழியில்லை. படிப்பு என்பது வடமொழிக்குப் போலவே தென்மொழிக்கும் வேண்டியதல்லவா? தென்மொழியை மாத்திரம் வாய் வந்தபடி யெல்லாம் உளறிவிடலாமென்று எந்த சாஸ்திரத்தில் ஏற்பட்டிருக்கிறதோ? என்று முன்னமே கேட்டிருக்கிறார்.

## உபஸம்ஹாரம்.

ஸ்ரீ ரங்கம் தேசிகஸூக்தி ஸம்ரக்ஷண ஸபையீர்காள்! அடியேன் இவ்வளவு பரிச்ரமங்கொண்டு விரிவாக எழுதியிருப்பது வீண்போகலாகாது. இப்புத்தகம் திருக்குடந்தை பாட்டராசார் தெருத் திண்ணைகளில் படிக்கப்பட்டு, அப்போதே வீரவாதஞ்செய்து வீஸிட்டெழுந்து சிசுபால பாஷைகளைச் செவ்வையாகப் பெய்து சில மஹான்கள் க்ரந்தமெழுதப் புறப்படுவார்களென்பதும், அது வெளிவந்த மறுநாளே இன்னமும் அற்புதமான விஷயங்களையே நிறைத்து அவர்களது பாண்டித்யப் பெருமையை பாரோமறியப்பன்னி யுரைக்க வல்ல பெரியபுராணம் கதிராயிரமிரவி கலந்தெரித்தா லொப்ப வெளிவருமென்பதும் கிடக்கட்டும். எந்தெந்த ப்ரதிவாதிகள் எந்தெந்த விஷயங்களில் எவ்வகையான ஸமாதானங்களை வெளியிட்டு வித்வான்களை உகப்பிக்கவேண்டுமோ, அவ்வகையான ஸமாதானங்கள் ஸமக்ரமாக வெளிவரும்வரையில் அந்தப் பிரதிவாதிகள் இத்தரணியில் தலையெடுக்க முடியாதென்பது சிலாசாஸனமேயாகும். ராயம்பேட்டை யவருமுட்பட திருக்குடந்தைப் பிரதிவாதிகள் ஸர்வஸ்வரக்ஷைக்கும் பரமார்த்த பரித்ராணத்திற்கும் பூர்த்தியாக

ஸமாதானஞ் சொல்லியே தலையெடுக்க வேண்டும். சேட்லூர் ஸ்வாமியும் சேஷாவதாரச் சிறப்பு முதலிய [முன்பு குறித்த] எட்டுப் புஸ்தகங்களுக்கும் உத்தரமளித்தே உய்யவேண்டும். இவ்வளவும் ஆய்விட்டால் அப்போதுதான் அண்ணங்கராசார் பல்லிழந்தபாம்பு போலாவர். இப்படி யாவதற்கு ஷை ஸபையின் அக்ராஸநாதிபதியான ப்ராமாணிக பண்டிதோத்தம. ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமி யொருவரே முன்னின்று இவ்விஷயங்களை யெல்லாம் சோதித்து ஸங்க்ரஹமாக வாகிலும் ஸ்வாபிப்ராயத்தை வெளியிட்டாக வேண்டும். இந்த வேண்டுகோள் நிறைவேறுவதற்கு அவகாசமின்றியே நீங்கள் எவ்வளவு பணம் செலவிட்டு எத்தனை க்ரந்தம் வெளியிட்டாலும் அத்தனையும் அடுத்த க்ஷணத்திலே அஜாகளஸ்தந ப்ராயமாகவே ஆகித்தீருமென்பதை மாயனும் மாற்றகில்லான்.

ஆக இந்த க்ரந்தத்தினால் அடியேன் தெரிவிப்பதின் ஸாராம்சம் இவ்வளவே;—கபிஸ்தலம் ஸ்வாமி, லக்ஷ்மீபுரம் ஸ்வாமி முதலான மஹான்கள் கொண்டாடி யிருக்கிறபடிக்கு விபரீதமாக, அண்ணங்கராசாருக்கு ஒன்றிலும் ஒன்றுந் தெரியாதென்பதே உங்களுடைய உண்மையான எண்ணமாகில் அவரையும் அவரது க்ரந்தங்களையும் ஸர்வாத்மநா அபதார்த்தமாகவே நினைத்து தத்கண்டனத்தில் வீண் பரிச்ரமம் கொள்ளாமல் வித்வான்களின் காலமும் தநிகர்களின் தனமும் வேறு நல்வழிகளில் செலவாகட்டும். இங்ஙனன்றிக்கே அவருடைய க்ரந்தங்கள் அவசியம் கண்டிக்க வேண்டியவைகள்தான் என்று தீர்மானமாகில் "செய்வன திருந்தச் செய்" என்பதைக் குறிக்கொண்டு,—எந்த விஷயத்திலும் எக்காலத்திலும் அவரிடம் தோல்வி யடையாதவர்களும், எதற்காகவும் அவரைப் புகழ்ந்து பேசாதவர்களும், என்றைக்கும் அவர்க்கு மன்னிப்புச் சடிதமெழுதாதவர்களும் ப்ரமாணிகசர்ணராய்ப் போருகின்றவர்களுமான ப்ரஸித்த மஹா பண்டிதர்களைக் கொண்டு அவருடைய கண்டநீயக்ரந்த மொவ்வொன்றையும் நிரவசேஷமாகக் கண்டித்தொழியுங்கோள்—இதற்காக அடியேன் ஸமர்ப்பணை ஆயிரம் ரூபாய்.

நானிலமுந் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ
மாநகரின் மாறன் மறை வாழ—ஞானியர்கள்
சென்னியணிசேர் தூப்புற் சேவடியோன் தேசிகன்வாய்த் தேன்மொழி
என்றுமிக்கப் பூமிக் கிழை. [கள்

முற்றுப் பெற்றது.